சைவ சித்தாந்தத்

# தேனமுது

சி. சு. மணி



அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம்
78, செல்வி நகர், சிந்துபூந்துறை, திருநெல்வேலி 1.

73-4

உ



# சைவசித்தாந்தத் தேனமுது

## ஓர் அறிமுகக் கையேடு

T. N. Ulaganathan,

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A B T

சி. சு. மணி

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A B T

அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம்
78, செல்விநகர், சிந்துபூந்துறை
திருநெல்வேலி-627 001.

விலை ரூ. 13



வெளியீடு எண்: 22

உரிமை : செல்வி மணி

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Saiva Siddhantha Thane Amuthu |
| Author | : | Si. Su. Mani |
| Publisher | : | S. Chithambaranatha Kalyani<br>Arulnandhisivam Arutpani Manram<br>78, Selvinagar, Tirunelveli |
| Language | : | Tamil |
| Date of Publication | : | May 1996 |
| Size of the Book | : | 21 × 14 Cms. |
| Printing Types Used | : | 10 Point |
| Number of copies | : | 1000 |
| Number of Pages | : | 52+iv |
| Printers | : | Rexy Printers<br>Tirunelveli-627 001. |
| Binding | : | Pulp Board |
| Subject | : | An introduction to<br>Saiva Siddhantha |

# பதிப்புரை

சைவ சித்தாந்த மெய்ப் பொருளியலைத் தமிழ் கூறும் நல்லுலகத்தில் பரப்புகின்ற நற்பணியில் எங்கள் மன்றம் ஈடுபட்டுள்ளது.

முதலில் சிறிய வெளியீடுகளும், அதன் பின்னர் சாத்திர நூற்களும் இம்மன்றத்தால் வெளியிடப் பெற்றன. அன்பர்கள் பலர் எளிமையான முறையில் சைவ சித்தாந்தக் கருத்துக்களை அறிமுகப் படுத்தும் வகையில் நூல் ஒன்று வேண்டும் என்று கேட்டுக் கொண்டதற்கு இணங்க இந்த நூலினை வெளியிடுகிறோம்.

இந்நூலினை இயற்றி உதவிய திரு. சி. சு. மணி அவர்களுக்கு நன்றி. மிகக் குறுகிய காலத்தில் இதனை அச்சிட்டுத் தந்த ரெக்ஸி பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. கயிலைமணி கோ. சீதாபதி அவர்களுக்கும் நன்றி.

தமிழ்ச் சைவ உலகம் இந்நூலையும் வரவேற்று ஆதரவு தரும் என்று நம்புகிறோம்

S. சிதம்பரநாத கல்யாணி
தலைவர்
அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம்

5—5—96
திருநெல்வேலி

# முன்னுரை

'சைவ சித்தாந்தத் தேனமுது' என்ற சொற்றொடரை வழங்கிய அருட்கொடை வள்ளல் குமரகுருபர முனிவர் ஆவார். அவர் அருளிய பண்டார மும்மணிக் கோவையில் இவ் அரிய, அழகிய சொற்றொடர் வருகிறது.

அதனையே 'தலைப்பாகக் கொண்டு, முதன் முதலாகச் சைவ சித்தாந்தம் பற்றி அறிந்து கொள்ள விரும்புகிற ஆர்வலர்களுக்கென இச்சிறு நூல் எழுதப்பெற்றது.

இதனை நூல் என்பதனைவிட நீண்ட கட்டுரை என்பதே பொருந்துவதாகும்.

இதனை எழுதியதன் நோக்கம் சைவ சித்தாந்தம் பயிலத் தொடங்குவோர் அப்பயிற்சியினை இரும்புக் கடலை என நினைத்து வெருண்டு விலகாமல், மகிழ்ந்து தொடர்தல் வேண்டும் என்பதுவே ஆகும்.

இதுபோன்ற நூல்கள் சைவ சித்தாந்த அறிஞர் பெரு மக்களால் இதற்கு முன்பே எழுதி வெளியிடப்பெற்றுள்ளன. ஆயினும் அவற்றைவிடச் சுருக்கமாக அமைத்து ஓர் அறிமுகக் கை ஏடு ஆக இது வெளிவருகிறது. இதனைக் கற்பதன் மூலம் இதனினும் விரிந்த நூல்களைக் கற்கும் ஆர்வம் தோன்றுதல் வேண்டும் என்பதற்காக ஆங்காங்குச் சில மேற்கோள்களும் தரப்பெற்றுள்ளன.

5—5—96

சி. சு. மணி

70, தெற்குக் கடைத் தெரு
பாளையங்கோட்டை

உ

# சைவ சித்தாந்தத் தேனமுது

## இயல் ஒன்று :

### வரலாறு

உலகில் தொன்மையான சமயங்களுள் ஒன்று சைவ சமயம். சிவ வழிபாட்டைப் பற்றியும் சைவ சமயத்தைப் பற்றியும் வரலாறு கூறுகிறது. எனினும் சைவம் தோன்றிய காலம் எப்போது என்பதை வரையறுத்துக் கூற இயலவில்லை. இந்தியத் துணைக் கண்டத்தில் மிகப் பழமையான வரலாற்றுச் சின்னங்கள் சிந்து சமவெளியில் மொகஞ்சேதாரோ, ஹரப்பா ஆகிய இடங்களில் கிடைப்பனவே ஆகும். அங்குக் கண்டு எடுக்கப்பட்ட முத்திரைகளிலிருந்தும் பிறவற்றிலிருந்தும் அக்கால மக்கள் சிவ வழிபாடு செய்தனர் என்பது தெளிவாகின்றது

இந்தியத் துணைக் கண்டத்துக்கு வெளியேயும் தொன்மைக் காலத்தில் சிவ வழிபாடு நிகழ்ந்தது என்பதற்கான வரலாற்றுத் தரவுகள் கிடைத்துள்ளன. மெக்சிகோவிலும், தென்அமெரிக்காவின் மாயன் நாகரிகத்திலும் மெசப்படோமியாவிலும் சிவ வழிபாடு நிலவிற்று என்பதைப் பல வரலாற்று அறிஞர்கள் உறுதிப்படுத்தி இருக்கின்றனர்.

வேதங்களில் முதன்மை பெற்ற கடவுளர்களின் வரிசையில் சிவன் என்னும் பெயர் இடம் பெறவில்லை. எனினும் சிவன் என்ற சொல் வேதத்தில் ஆளப்பட்டுள்ளது

உபநிடத காலத்தில் சிவ வழிபாட்டைப் பற்றிய வெளிப் படையான குறிப்புகளும், சைவசித்தாந்தத் தத்துவத்தின் கருத்துக் களும் சொல்லாட்சிகளும் மிகுதியாகக் காணக் கிடக்கின்றன.

வரலாற்று முறைப்படி பார்த்தால் உபநிடத காலத்தை அடுத்துச் சமண பௌத்த சமயங்களின் செல்வாக்கு மிகுதியும் பெருகிற்று என்பதை அறியலாம். இக்கால கட்டத்தில் வைதிக சமயங்கள் தமது செல்வாக்கை இழந்திருந்தன. ஆயினும் அவை முற்றிலும் வழக்கொழிந்து போயின என்று கொள்ள முடியாது. ஆங்காங்கு அவற்றைக் கடைப்பிடிப்பவர்களும் அவை சார்ந்த நூல் களைப் பயிற்றுவிப்பவர்களும் பயில்பவர்களும் இருந்தே வந்துள்ளனர். அதனால்தான், இந்தியத் துணைக் கண்டம் முழுவதிலும் சமண பௌத்த

சமயங்களுக்கு எதிரான இயக்கங்கள் தோன்றி வலுப்பெற்றபோது வேத உபநிடதக் கருத்துகள் மீண்டும் தலை தூக்குவதற்கு உரிய சூழ்நிலை வாய்த்தது.

இந்திய நாட்டின் சமயங்கள் யாவும் இரண்டு பெரும் பிரிவுகளுக்குள் அடங்கும். ஒன்று வைதிகம். மற்றொன்று அவைதிகம். வைதிக சமயங்கள் என்பன வேதங்களின் முதன்மையை ஏற்றுக் கொள்வனவாகும். அவைதிக சமயங்கள் என்பன வேதங்களை ஏற்றுக் கொள்ளாதனவாகும். சைவம் வைணவம் மீமாஞ்சை முதலியன முதற் பிரிவில் அடங்கும். உலகாயதம் சமணம் பௌத்தம் என்ற மூன்றும் இரண்டாவது பிரிவில் அடங்கும்.

அவைதிக சமயங்கள் ஒரு வகையில் தம் கொள்கையில் மிகத் தெளிவாக இருந்தன என்பது உண்மை. ஏனெனில் அவை வேதங்களையும் உபநிடதங்களையும் முற்றிலுமாக ஒதுக்கி விட்டன. இந்த வகையில் அவை தெளிவான, உறுதியான நிலைப்பாட்டைக் கொண்டிருந்தன.

வைதிக சமயங்களில் இத்தகைய தெளிவான நிலைப்பாட்டைக் காண இயலவில்லை. ஏனெனில் எந்த ஒரு வைதிக சமயமும் வேதங்களை முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை வேதங்களில் எந்தப் பகுதிகள் தம்முடைய கருத்துக்கு இசைந்தனவோ அவற்றை அவரவர் ஏற்றுக்கொண்டார்கள். ஒத்து வராத பகுதிகளை ஒதுக்கி விட்டார்கள். அல்லது அப்பகுதிக்கு வலிந்து உரை கண்டு தம் கருத்துக்கு ஏற்பப் பொருள் கொண்டனர். இதனால் ஏற்படுகின்ற முரண்பாடுகளே பிற்காலத்தில் எழுந்த பல்வேறு தரிசனங்களுக்கு வித்திட்டன.

சைவ சமயம் தன்னை வைதிக சமயம் என்றே அழைத்துக் கொண்டது. எனினும் வேதங்களோடு நின்று விடாது சைவ ஆகமங்களையும் தனக்கு உரிய முதன்மை நூல்களாகக் கொண்டது. ஆகமங்கள் சிவபெருமானால் அருளிச் செய்யப்பட்டவை. ஒவ்வோர் ஆகமத்துக்கும் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞான பாதம் என்று நான்கு பிரிவுகள் உண்டு. முதன்மையான ஆகமங்களாக இருபத்தெட்டு ஆகமங்களைக் கொள்ளுவர். இவற்றின் கிளைகளாக 207 உபாகமங்கள் உள்ளன எனவும் கூறுவர்.

ஆகமங்களை உடன்படுவதால் வேத நெறியில் தீவிரப் பற்று உள்ளவர்கள் சைவ சமயத்தை வேதத்துக்குப் புறம்பாகக் கூறுவதும் உண்டு. ஆயினும் வைதிக சமயம் என்று தம்மை இனங்காட்டிக்

கொள்ளச் சைவர்கள் வேதத்துக்கும் ஆகமத்துக்கும் இடையே முரண்பாடுகள் ஏதும் இல்லை என்று வாதிடுவர்.

> ''வேதமோடு ஆகமம் மெய்யாம் இறைவன் நூல்
> ஓதும் பொதுவும் சிறப்பும் என்று உன்னுக
> நாதன் உரைஅவை நாடில்இரண்டந்தம்
> பேதமது என்பர் பெரியோர்க்கு அபேதமே''
>
> (திருமந்திரம்-2397)

என்று திருமூலர் கூறுவது சிந்திக்கத்தக்கது. சைவ சமயத்தில் வேதங்களை மூலமாகவும், ஆகமங்களை அம்மூலத்துக்கு எழுந்த விரிவுரைகளாகவும் கொள்ளப்படுகின்றன.

**தமிழகத்தில் சைவம்**

இதுவரையில் இந்தியத் துணைக்கண்டத்தின் சமய நெறிகளிலே சைவத்துக்கு உரிய இடம் பற்றிக் கண்டோம். இப்பகுதியில் தமிழக வரலாற்றில் சைவ சமயத்துக்கு உரிய இடம் பற்றிச் சிறிது காணலாம்.

**தொல்காப்பியம்**

தமிழ் நூல்களில் காலத்தால் மிகவும் முற்பட்டது தொல்காப்பியமே. வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் தொல்காப்பியம் தோன்றிய காலத்தை வரையறுத்துக் கூறுவதில் தங்களுக்குள் வேறுபடுகின்றனர். ஆனால் நமக்குக் கிடைத்துள்ள நூல்களில் அதுவே மிகப் பழமையானது என்பதில் அவர்களுக்குள் கருத்து வேறுபாடு இல்லை. தொல்காப்பியத்தில் சிவன் என்ற பெயர் இடம் பெறவில்லை. ஆயினும் நால்வகை நிலங்களுக்கு உரிய தெய்வங்களிலும் மேம்பட்டதாக ஒரு கடவுளைப் பற்றி அது பேசுகிறது. கொடிநிலை கந்தழி வள்ளி என்ற தொல்காப்பியச் சொல்லாட்சிகளைப் பற்றி ஆராய்ச்சியாளர்களுக்குள் ஒருமித்த கருத்து இல்லை. ஆயினும் எல்லாவற்றையும் கடந்ததாகவும் எல்லாப் பொருள்களுக்குள்ளும் நின்று இயக்குவதாகவும் பொருள் தருகின்ற கடவுள் என்ற சொல்லைத் தொல்காப்பியர் பயன்படுத்தியுள்ளார். எனவே முழுமுதற் கடவுட் கொள்கை அவர் காலத்திலேயே முகிழ்த்துவிட்டது என்பதை அறியலாம்.

தொல்காப்பியம் எழுத்து சொல் பொருள் இலக்கணங்களை வரையறுத்துக் கூறுகின்ற நூல். அதன் நூற்பாக்கள் சிலவற்றில் உயிர், இறை, வினை பற்றிய சைவ சமயக் கோட்பாடுகள் பொதிந்து உள்ளன என்பதை அறிஞர்கள் எடுத்துக்காட்டுவர்.

உயிர் என்பது அறிவுடைப்பொருள். அது ஓர் அறிவு முதல் ஆறு அறிவுடைய வகைகளாகக் காணப்படுகின்றன. நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்ற ஐம்பெரும் பூதங்களும் தம்முட் கூடி இவ்வுலகம்

தோன்றுகிறது. வினை என்பது எல்லோர்க்கும் ஒருபடித்தாகவே பயன் தரும். அது வேற்றுமை பாராட்டாது. உரியகாலம் வந்த பிறகே வினைப்பயன் ஓர் உயிரைப் பொருந்தும். இவை எல்லாம் தொல் காப்பியத்தில் அமைந்திருக்கும் தத்துவக்கூறுகள். இவ்வுண்மைகள் சைவ சமயத்தால் எடுத்துரைக்கப்படும் தத்துவக் கொள்கைகளாக அமைவதை அறிஞர்கள் ஒப்பிட்டுக்காட்டுவர்.

**சங்க காலம்**

தொல்காப்பியத்தை அடுத்து வருவன சங்க இலக்கியங்கள். எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும் சங்க இலக்கியங்கள் என்று பெயர் பெறும். இவற்றில் சிவன் என்ற பெயரோ, சைவம் என்ற சமயமோ, பெயர் சுட்டிக் குறிப்பிடப்படவில்லை. ஆயினும் சிவபெருமானையே உணர்த்தும் சொற்றொடர்கள் பரவலாக காணப் படுகின்றன. நீலமணி மிடற்று ஒருவன் கூர்ம் படைக் கணிச்சி வானவன், முப்புரம் எரித்தவன், உமையம்மையை ஒருபாகத்தில் கொண்டவன் என்பன போன்ற சொற்றொடர்களால் சிவபெருமான் குறிப்பிடப்படுகின்றான். இத்தகைய செய்திகளிலிருந்து சிவ வழிபாடு சங்க இலக்கிய காலத்தில் தமிழகத்தில் நிலை கொண்டிருந்தது என்பதை நாம் அறிய முடிகிறது.

கால வரிசைப்படி எட்டுத்தொகைக்கும் பத்துப்பாட்டிற்கும் அடுத்ததாக வருவது திருக்குறள். உலகளாவிய பார்வை கொண்ட திருவள்ளுவர் தமது நூலில் எந்த நாட்டையும் எந்த மொழியையும் எந்த சமயத்தையும் பெயர் சுட்டிக் குறித்திலர். திருக்குறளை நுணுகிப் பயின்றவர்கள் திருவள்ளுவரின் விரிந்த சமய அறிவினை உணர்ந்துகொள்ள இயலும் அதே நேரம் எந்தச் சிமிழுக்குள்ளும் அகப்படாமல் ஓங்கி வளர்ந்த அவரது பொதுமை நோக்கையும் உணரமுடியும் ''சமயக் கணக்கர் மதி வழி கூறாது உலகியல் கூறிப் பொருள் இது என்ற வள்ளுவர்'' என்று அவர் பாராட்டப் பெற்றது பொருந்துவதே வள்ளுவரின் திருக்குறள் சைவ சமயத்தின் தத்துவக் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. அக் கருத்துக்களின் மிகுதியை அடிப்படையாகக் கொண்டு திருவள்ளுவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்றே அறிஞர்கள் சிலர் கருதினர். தங்கள் கருத்தினை வலியுறுத்தி நூல்களும் எழுதியுள்ளனர்.

**சிலம்பில்...**

தமிழ் இலக்கிய வரலாற்றில் திருக்குறளுக்கு அடுத்தபடியாகக் கால வரிசையில் இடம் பெறுவன சிலப்பதிகாரமும் மணிமேகலையும் எனலாம். சில ஆராய்ச்சியாளர்கள் இக்கருத்தை உடன்படாது இக்

காப்பியங்களின் காலம் ஆறும் நூற்றாண்டு என்பர். எனினும் பெரும்பான்மையானவர்களின் கருத்தை ஒட்டி இவை இரண்டையும் கி.பி. 2ம் நூற்றாண்டு எனக் கொள்ளுவதில் தவறில்லை.

சிலப்பதிகாரத்தில் சிவபெருமான் ''பிறவா யாக்கைப் பெரியோன்'' என்ற பெயரால் வழங்கப்படுகிறான். புகார் நகரில் அமைந்திருந்த கோயில்களை வரிசையாகக் கூற வந்த இளங்கோவடிகள் முதன்மையான இடத்தை, சிவன் கோயிலுக்கே வழங்குகிறார். வஞ்சிக் காண்டத்தில் சேரன் செங்குட்டுவன் வட நாட்டுப் படை எடுப்புக்காகப் புறப்படுகிறான். அப்போது ஆடக மாடத்து அறிதுயல் அமர்ந்த திருமால் கோயிலிலிருந்து சேடம் கொண்டு சிலர் வந்து மன்னவனிடம் வழங்குகிறார்கள். சிவபெருமான் திருக்கோயிலிலிருந்து வந்த அருட்பிரசாதத்தை முன்பே வாங்கித் தலையில் தரித்துக் கொண்ட செங்குட்டுவன், திருமால் கோயிலில் இருந்து வந்தவற்றைத் தன் அணி மணிப் புயத்து அணிந்தனன் என்கிறார் இளங்கோவடிகள்.

சைவர்களுக்கே சிறப்பாக உரிய திருவைந்தெழுத்து மந்திரத்தைப் பற்றிய செய்தி முதன் முதலாகச் சிலப்பதிகாரத்தில் தான் இடம் பெறுகிறது. சிவன் என்ற பெயரும் இக்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது.

**மணிமேகலை**

மணிமேகலைக் காப்பியத்தின் ஆசிரியராகிய சாத்தனார் பௌத்த சமயத்தைச் சார்ந்தவர். அவர் தமது காப்பியத்தை பௌத்தக் கருத்துக்களைப் பரப்பும் நோக்கத்துடனேயே இயற்றினார் என்பது மிகையன்று.

மணிமேகலையில் சமயக்கணக்கர் தம் திறம் கேட்ட காதையில் சைவசமயத்தைப் பற்றிய செய்திகள் ஒரளவு விரிவாகவே கூறப் பெற்றுள்ளன. அவற்றுள் சிவபெருமானின் எண் வகை வடிவங்கள் (அட்ட மூர்த்தம்) பற்றிய செய்தி சிறப்பாக நோக்கத்தக்கது.

இதன் பின்னர் தமிழக வரலாற்றில் களப்பிரர்காலம் இடம் பெறுகிறது என்பர். கி.பி மூன்றும் நூற்றாண்டுக்கும் கி.பி ஆறும் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலம் என்று இதனைக் கொள்ளலாம். சில வரலாற்று ஆய்வாளர்கள் கருத்துப்படி மாணிக்கவாசகரும் திருமூலரும் காரைக்கால் அம்மையாரும் இக்கால எல்லைக்குள் வாழ்ந்தனர். இக்கொள்கை வேறு சில ஆய்வாளர்களால் மறுக்கப் படுகிறது.

**பத்தி இயக்கம்**

இதனை அடுத்து வரும் காலப் பகுதியைப் பெரும்பாலான வரலாற்று ஆசிரியர்கள் பத்தி இலக்கியக் காலம் என்ற பெயரால் குறிப்பிடுகின்றனர். இக்கால எல்லையில் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும், அவர்களையடுத்து ஏறத்தாழ ஒருநூற்றாண்டிற்குள் சுந்தரமூர்த்தி நாயனாரும் வாழ்ந்தனர். இம்மூவர் முதலிகளின் பாடல்கள் தேவாரம் என்ற பொதுப் பெயரால் அழைக்கப் பெறுகின்றன.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் சைவ சமய வளர்ச்சியில் அருப்பங்கு ஆற்றிய அருளாளர்கள் ஆவர். இவர்கள் மூவருடன் மாணிக்கவாசகரையும் சேர்த்து நால்வர் பெருமக்களையும் சமயகுரவர் என்று அழைப்பது மரபு. இவர்கள் தமிழகம் முழுவதும் சுற்றிப் பல ஊர்களிலும் கோயில் கொண்டு விளங்கும் சிவபெருமானை ஏழிசைத் தமிழ்ப் பாமாலைகளால் பாடி வணங்கினர் சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கு மங்கவும், சைவ சமயம் தழைக்கவும் இவர்கள் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது.

இவர்கள் இயற்றிய அருள் நூல்கள் தோத்திரம் என்ற வகையுள் அடங்குவன. எனினும் அவற்றில் சைவ சித்தாந்தத் தத்துவக் கூறுகள் நிரம்பியிருக்கக் காணலாம். இதுபற்றியே திருமுறைப்பிழிவே சைவ சித்தாந்தம் என்ற கருத்து அறிஞர்களால் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**திருமுறைகள்**

திருஞான சம்பந்தரின் தேவாரம் முதல், இரண்டாம், மூன்றும் திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டன திருநாவுக்கரசரின் தேவாரம் நான்காம், ஐந்தாம், ஆறும் திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டன. சுந்தரமூர்த்தி நாயனாரின் தேவாரம் ஏழாம் திருமுறை என வைக்கப் பட்டது.

மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையாக இடம் பெற்றுள்ளன. திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் ஒன்பதாம் திருமுறையாகும். இதன் ஆசிரியர்கள் ஒன்பதின்மர்.

திருமூலரின் திருமந்திரம் பத்தாம் திருமுறையாகும். இந்நூல் ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு தந்திரமும் ஓர் ஆகமத்தின் சாரம் என்று பெரியோர் கூறுவர். திருமூலரே "சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றேனே" என்று ஒரு பாடலில் குறிப்பிடு கிறார். சித்தாந்தம் என்ற சொல்லாட்சி திருமந்திரத்தில்தான் முதன் முதலில் இடம் பெறுகிறது என்பது குறிப்பிடத்தகுந்தது.

பதினொன்றும் திருமுறையாக ஆசிரியர்கள் பன்னிருவர் எழுதிய சிற்றிலக்கியங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இத்தொகுதிக்குப் பிரபந்தமாலை என்னும் பெயரும் வழங்குகிறது.

சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாம் திருமுறையாகப் போற்றப்படுகிறது இதனைப் பெரியபுராணம் என்று வழங்குவது மரபு, சுந்தரமூர்த்தி நாயனாரின் வாழ்க்கையை ஊடு சரடாகக் கொண்டு அறுபத்து மூன்று தனியடியார்களின் வாழ்க்கை வரலாற்றையும், ஒன்பது தொகையடியார்களின் சீர்மையையும் கூறுவது இந்நூல். இது பதின்மூன்று சருக்கங்களைக் கொண்டது.

மேலே கூறப்பட்ட பன்னிரண்டு திருமுறைகளும் தோன்றிய காலப்பகுதி கி.பி. மூன்று அல்லது நான்காவது நூற்றாண்டு தொடங்கி. கி.பி. பதினொன்றும் நூற்றாண்டு வரை ஆகும். காஞ்சிபுரத்தை தலைநகராகக் கொண்ட பல்லவப் பேரரசு தலைழத்திருந்த காலம் தொடங்கிப் பிற்காலச் சோழப் பேரரசு சிறப்புற்று விளங்கிய காலம் வரை இவையனைத்தும் தோன்றின. இக்கால எல்லையே தமிழகத்தில் சைவ சமயம் ஓங்கி வளர்ந்த பொற்காலம் எனலாம்.

**சாத்திரங்கள்**

சைவ சமயத்தின் வளர்ச்சிப் படிநிலைகளை இதுவரை கண்டோம். சைவ சித்தாந்தம் எனும் மெய்ப் பொருளியல் கோட்பாடுகள் வளர்ந்த வரலாற்றினை இனிக்காண்போம்.

திருஞானசம்பந்தர் காலம் முதலே சைவ சமயத்தை வேதங்களுடன் தொடர்பு படுத்தி வைதிக சைவம் எனக் குறிப்பிடும் மரபு தோன்றிவிட்டது. திருஞானசம்பந்தரே "வேத வேள்வியை நிந்தனை செய்துழல் ஆதம் இல்லி அமணொடு தேரரை வாதில் வெல்ல" இறைவனின் அருளாணையை வேண்டிப் பாடுகிறார்.

பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தரின் திரு அவதாரத்தைச் சிறப்பித்துப் பாடும் சேக்கிழார் "வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க" அவர் தோன்றினார் என்று பாராட்டிப் பாடுகின்றார்.

சைவ சித்தாந்த தத்துவ நெறியும் வேதத்திலிருந்து தொடங்கி வழிவழியாக இவ்வுலகில் பரவிற்று என்பது மூத்தோர் கொள்கை.

சீகண்டபரமசிவன் நந்தியெம் பெருமானுக்கு எடுத்துரைக்க அவர் சனகர் முதலிய முனிவர்கள் நால்வர்க்கும் உரைத்தார். நால்வரில் ஒருவரான சனற்குமாரர் சத்தியஞான தரிசனிகளுக்கும் அவர் பரஞ்சோதி முனிவர்க்கும் சைவ சித்தாந்தப் பொருளை வரையறுத்து

உணர்த்தினர் என்பர். நந்தியெம்பெருமான் சனற்குமார முனிவர் சத்தியஞான தரிசனிகள் பரஞ்சோதி முனிவர் ஆகிய நால்வரும் அகச் சந்தானகுரவர் என்று போற்றப்பெறுகின்றனர்.

தமிழ்நாட்டில் திருவெண்ணெய்நல்லூரில் இரண்டே வயது நிரம்பிய மெய்கண்ட தேவரின் பக்குவ நிலையை உணர்ந்து பரஞ்சோதி முனிவர் அவருக்குச் சைவ சித்தாந்தத்தை அருளிச் செய்தார் என்பர். மெய்கண்ட தேவரின் பிள்ளைத் திருப்பெயர் திருவெண்காட்டுப்பெருமான் என்பதும் பரஞ்சோதி முனிவர் அவருக்குச் சூட்டிய தீக்கைத் திருப்பெயரே மெய்கண்டார் என்பதும் மரபு வழிச் செய்திகள்.

மெய்கண்ட தேவநாயனாருக்கு மாணவர்களாக நாற்பத் தொன்பதின்மர் இருந்தனர் என்பர் இவர்களுள் முதன்மையானவர் அருள்நந்திசிவம். மற்றொரு மாணவர் திருவதிகை மனவாசகம் கடந்தார். பிற மாணவர்கள் பற்றிய செய்திகள் தெரிந்தில.

ஆசிரியர் அருள் நந்தி சிவத்தின் மாணவராக விளங்கியவர் மறை ஞானசம்பந்தர். மறை ஞானசம்பந்தரின் மாணவர் உமாபதி சிவம். மெய்கண்ட தேவர், அருள் நந்தி சிவம், மறை ஞானசம்பந்தர், உமாபதி சிவம் ஆகிய நால்வரும் புறச்சந்தான குரவர்கள் எனப் படுவர். அகச்சந்தான குரவர்களும் புறச்சந்தான குரவர்களும் ஆகிய எண்மரும் உபதேச பரம்பரை என்ற பெயரால் குறிக்கப் பெறுவர். இவர்களுக்குப் பின் வந்த ஆசிரிய மரபினர் அபிடேக பரம்பரை என வழங்கப் பெறுவர்.

ஆசிரியர் மெய்கண்ட தேவநாயனார் சைவ சித்தாந்தத்தின் ஒப்பு உயர்வுற்ற நூலான சிவஞான போதத்தை இயற்றியருளினார். இந்நூலில் பன்னிரண்டு நூற்பாக்கள் உள்ளன. ஒவ்வொரு நூற்பா வுக்கும் வேறுபட்ட எண்ணிக்கையிலான அதிகரணங்கள் எனப்படும் கூறுகள் அமைந்துள்ளன. நூல் முழுமைக்கும் ஆக மூப்பத்தொன்பது அதிகரணங்கள் உள்ளன. இவை தவிர எடுத்துக்காட்டு வெண்பாக் களாக எண்பத்தொரு வெண்பாக்கள் அமைந்துள்ளன. இந்நூலினை மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டுகளுமாக அமைத்து வார்த்திகப் பொழிப்புரையையும் மெய்கண்ட தேவரே இயற்றியருளினார் என்பர்.

ஆசிரியர் அருள் நந்தி சிவனார் இரண்டு நூல்களை இயற்றி அருளினார். அவற்றுள் சிவஞான சித்தியார் மெய்கண்ட சாத்திரங் களுள் மிக விரிவான நூல். இந்நூல் பரபக்கம் சுபக்கம் என்ற இரு பெரும் பிரிவுகளை உடையது. பரபக்கத்தில் 301 திருவிருத்தங்களும் சுபக்கத்தில் 328 திருவிருத்தங்களும் இடம் பெற்றுள்ளன. சிவஞான போதத்திற்குச் செய்யுள் நடையில் அமைந்த விளக்கமாக இந்நூல் திகழ்கிறது. அருள் நந்தி சிவத்தின் மற்றொரு நூல் இருபா இருபஃது

ஆகும். புறச்சந்தான குரவர்களில் மூன்றுமவராகிய மறை ஞான சம்பந்தர் நூல் ஏதும் இயற்றியதாகத் தெரிய வரவில்லை.

நான்காமவராகிய ஆசிரியர் உமாபதிசிவம் மெய்கண்ட சாத்திரங்களில் எட்டு நூல்களை அருளிச் செய்தார் என்பர். இவை சித்தாந்த அட்டகம் என்ற பெயரால் குறிக்கப்பெறும். சிவப்பிரகாசம் திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் ஆகிய எட்டு நூல்களும் ஆசிரியர் உமாபதிசிவம் அருளியவையாகும். சில ஆராய்ச்சியாளர்கள் உண்மைநெறி விளக்கம் என்ற நூல் உமா பதி சிவம் அருளியது அன்று என்றும் கொள்ளுவர்.

உண்மை விளக்கம் என்ற நூலின் ஆசியராக விளங்குபவர் திருவதிகை மனவாசகம் கடந்தார். இவர் மெய்கண்ட தேவரின் நேரடி மாணவர்களுள் ஒருவராவார். இந்நூல் காப்புச் செய்யுளுடன் சேர்த்து மொத்தம் 54 வெண்பாக்களுடன் அமைந்துள்ளது. சைவ சித்தாந்தத்தைக் கற்கத் தொடங்கும் மாணவர்களுக்கு இந்நூலே ஆசிரியர்களால் பெரும்பாலும் முதன் முதலாகக் கற்பிக்கப்படும்.

மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கு என்று கொள்ளப்பெறும். அவற்றுள் இதுவரை பன்னிரண்டு நூற்களைப் பற்றிய குறிப்புகள் தரப் பட்டன. திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் அருளிய திருஉந்தி யாரும், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் அருளிய திருக்களிற்றுப் படியாரும் மற்றைய இருநூல்களாகும் இந்நூலாசிரியர் இருவரும் மெய்கண்ட தேவநாயனாருக்குக் காலத்தால் முற்பட்டவர்கள் ஆவர். மெய்கண்டாரின் காலம் கி.பி 13ம் நூற்றாண்டுத் தொடக்கம் என்பர். ஆசிரியர் உமாபதிசிவத்தின் காலம் கி.பி 14ம் நூற்றாண்டு என்பர். எனவே இந்நூற்கள் எல்லாம் ஏறத்தாழ ஒன்றரை நூற்றாண்டிற்குள் எழுந்தவை எனக்கொள்ளலாகும்.

மெய்கண்ட தேவநாயனாரின் காலத்துக்கு முற்பட்டதாக நமக்குக் கிடைத்துள்ள ஒரு சாத்திர நூல் ஞானாமிருதம் ஆகும். இந் நூலின் ஆசிரியர் வாகீசமுனிவர் என்பவர். அவர் திருநெல்வேலி மாவட்டத்தில் திருவாலிசுவரம் என்னும் ஊரில் வாழ்ந்தவர். இந் நூலின் ஞான பாதம் மட்டிலுமே அச்சேறியுள்ளது சிவஞான மாபாடியத்தில் மாதவச்சிவஞான முனிவர் ஞானாமிருதத்தின் கிரியா பாதத்திலிருந்து ஒரு செய்யுளை மேற்கோளாக எடுத்துக்காட்டி யுள்ளார். எனவே இந்நூல் நமக்கு முழுமையாகக் கிடைத்தில்து என்றே கொள்ளல் வேண்டும்.

**திருமடங்கள்**

மெய்கண்ட தேவர் முதல் உமாபதிசிவம் ஈருக உள்ள நால்வர் பெருமக்களும் சந்தானகுரவர் என்ற பெயரால் வழங்கப் பெறுவர். இவர்களுடைய மரபு மெய்கண்டார் திருமரபு ஆகும். இவர்களுக்குப் பின்னர்த் தோன்றிய ஆசிரிய மரபினை அபிடேக பரம்பரை என வழங்குவர். அபிடேக பரம்பரையில் தோன்றிய சைவத் திருமடங்கள் தமிழகத்தில் பல்வேறு ஊர்களில் உள்ளன. இத்திருமடங்களே சந்தான குரவர்களின் காலத்துக்குப் பின்னர் சைவ சித்தாந்தக் கொள்கையை தமிழகத்தில் நிலைநிறுத்தி வருகின்றன. இத்திரு மடங்களுள் சிறப்பிடம் பெறத்தக்கவை மூன்றாகும். அவை திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருப்பனந்தாள் காசித் திருமடம் ஆகியன.

திருவாவடுதுறைத் திருமடத்தின் முதல் ஆசிரியராக விளங்கி அதனைத் தோற்றுவித்து நிலைநிறுத்தியவர் நமசிவாய தேசிகமூர்த்தி ஆவர். அவரைப் பஞ்சாக்கரதேசிகர் என்று குறிப்பிடுவது மரபு. இத்திருமடம் சைவமும் தமிழும் தழைத்தோங்கி வளர்கின்ற பண்ணை யாக மிளிர்ந்து வருகிறது. சிவஞான போதத்துக்குப் பேருரையும் சிற்றுரையும் வகுத்த மாதவச் சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர் போன்ற பல பெருமக்கள் இத்திருமடத்தின் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

தருமபுர ஆதீனத் திருமடத்தைத் தோற்றுவித்தவர் குருஞானசம்பந்த தேசிக மூர்த்திகள் ஆவார். இவர் திருவாரூரில் வாழ்ந்திருந்த கமலை ஞானப்பிரகாசரின் மாணவராவார். தமது ஆசிரியரின் கட்டளையை ஏற்று மயிலாடுதுறையை அடுத்த தருமபுரத்தில் தனி மடத்தை நிறுவினர். குமரகுருபர முனிவர், வெள்ளியம்பலத்தம்பிரான் முதலிய பெருமக்கள் இத்திருமடத்தின் திருக்கூட்டத்தினர். இத்திருமடமும் சைவப் பணியிலும் தமிழ்ப் பணியிலும் சிறந்து விளங்கி வருகிறது.

திருப்பனந்தாள் காசித் திருமடத்தை நிறுவியவர் குமரகுருபர முனிவர் கி.பி. 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய குமரகுருபர முனிவர், தருமபுர ஆதீனத்தின் நான்காவது பட்டத்தில் வீற்றிருந்த மாசிலாமணி தேசிகரின் மாணவராக விளங்கினர். தம் ஆசிரியரின் கட்டளைப்படி காசியிலே சைவத் திருமடத்தை நிறுவினர். அதுவே பின்னர் திருப்பனந்தாளில் இடங்கொண்டது. இத்திருமடமும் சாத்திர தோத்திர நூல்களை வெளியிட்டு சைவத் தொண்டும் தமிழ்த் தொண்டும் புரிந்து வருகின்றது.

## இயல் இரண்டு :

### இறைவன்

சைவசித்தாந்தம் என்ற சொற்களைக்கேட்ட அளவிலே பதி பசு பாசம் என்பனவே பலருக்கு நினைவில் வரும். சைவசித்தாந்தத்தில் மிகுதியான பயிற்சியும் ஆழமான தோய்வும் இல்லாதவர்க்கும் கூட அது முப்பொருள் உண்மை பேசுவது என்பது தெரியும். ஏனெனில் இம்முப்பொருள்களின் அடிப்படையிலேயே சைவசித்தாந்த மெய்ப் பொருளியல் எனும் எழுநிலை மாடம் கட்டப்பட்டுள்ளது.

**''பதி பசு பாசம் எனப்பகர் மூன்றில்**
**பதியினைப்போல் பசு பாசம் அநாதி**
**பதியினைப்போய் அணுகாப் பசு பாசம்**
**பதி அணுகில் பசு பாசம் நிலாவே''** என்பது திருமூலரின் திருமந்திரம்

எல்லாம் வல்ல ஈடு இணையற்ற ஒரே இறைவன். எண்ணிறந் தனவாகிய உயிர்கள். உயிர்களைப் பிணித்துள்ள தளைகள். இவை மூன்றுக்குள்ளேயே உலகத்துப் பொருள்கள் யாவும் அடங்கும் என்பது சைவசித்தாந்தத்தின் கொள்கை.

தளைகள் உயிர்களைப் பிணிக்குமேயன்றி இறைவனைப் பிணிக்க மாட்டா, தோற்றமில் காலந்தொட்டு உயிர்களைக் கட்டியிருந்த தளை ஆணவ மலம் என்று பெயர் பெறும். மலம் என்றால் அழுக்கு என்ற பொருளைத் தரும். இதன் வழியாக உயிரை வந்து பற்றுவன மாயை கன்மம் என்ற மேலும் இரண்டு தளைகள். இவை மும்மலங்கள் எனப் பெறும். மாயை என்பது தூய மாயை தூவா மாயை (சுத்த மாயை, அசுத்த மாயை) என்று இரண்டாகக் கொள்ளப்படும்.

திருவருட்பயன் என்ற நூலில் ஆசிரியர் உமாபதி சிவம்
**''ஏகன் அநேகன் இருள் கன்மம் மாயை இரண்டு**
**ஆக இவை ஆறு ஆதி இல்''**
என்று இந்த ஆறு பொருள்களையும் தோற்றம் இல்லாதவை என்று குறிப்பிடுகின்றார். இவை தோற்றம் இல்லாதவை ஆதலால் இவற்றுக்கு ஒருபோதும் அழிவு இல்லை.

என்றென்றும் உள்ள பொருள்களான பதி பசு பாசம் என்ற மூன்றும் பொது இயல்பு சிறப்பியல்பு என்று இரு வேறு இயல்புகளை உடையன. சிறப்பியல்பு என்பது அப்பொருளுக்கு உரிய என்றும் நீங்காத இயல்பு ஆகும். பொதுவியல்பு என்பது அப்பொருள் மற்றொன்றோடு தொடர்பு கொள்ளும் போது தோன்றுகிற இயல் பாகும். இடையிலே தோன்றிய பொதுவியல்பு அது

தோன்றுவதற்குக் காரணமான மற்றொரு பொருளின் தொடர்பு நீங்கும் பொழுது தானும் நீங்கி விடும். எடுத்துக்காட்டாகத் தண்ணீரின் சிறப்பு இயல்பு குளிர்ச்சி. தண்ணீரை ஒரு பாத்திரத்தில் இட்டு நெருப்பு மூட்டிச் சுடவைக்கும் போது அது சூடுள்ள வெந்நீராகிறது. வெந்நீரின் வெம்மை பொதுவியல்பாகும். நெருப்பு என்ற பொருளின் தொடர்பு நீங்கிச் சற்று நேரம் கழிந்த பிறகு தண்ணீர் மீண்டும் குளிர்ந்து தனது சிறப்பியல்பான குளிர்ச்சியை மீண்டும் பெறுகிறது.

இத்தகைய இருவகை இயல்புகள் முப்பொருள்களுக்கும் உள்ளன என்பதை சைவசித்தாந்தம் வலியுறுத்துகிறது.

முப்பொருள்களில் பதி எனப்படும் இறைவன் தனித்த சிறப்பியல்புகள் உடையவன். அவன் எண் குணங்கள் உடையவன். முற்றுணர்வுடைமை, வரம்பில் இன்பமுடைமை, இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில்லா ஆற்றலுடைமை. தன்வயமுடைமை, இயற்கை உணர்வினனுதல், தூயவுடம்பினனுதல் ஆகியவை இறைவனின் எண்குணங்களாகும்.

இறைவனை நிர்க்குணன் என்ற பெயரால் சைவ அருளாசிரியர்கள் குறிப்பிடும் போது அவன் குணங்களே அற்றவன் என்ற பொருளில் குறிப்பிடுவதில்லை. முக்குணங்கள் என்று கூறப்படும் சத்துவம், இராசதம், தாமதம் என்ற குண வேறுபாடுகளைக் கடந்தவன் என்ற பொருளிலேயே இறைவன் நிர்க்குணன் என்று பேசப்படுகிறான்.

உயிர்களின் புலனறிவுக்கு எட்டாத இறைவனை அறிவதற்கு அநுமான அளவையும் உரையளவையும் அவன் திருவருளும் துணை நிற்க வேண்டும் என்பது சைவசித்தாந்தக் கொள்கை.

''அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதி காட்டொணாதே'' என்பது அப்பர் தேவாரம் (6-97-10) ''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'' என்பது மாணிக்கவாசகர் (திருவாசகம்-சிவபுராணம்) திருவாக்கு.

### தருபவன் ஒருவன் வேண்டும்

எனவே இறைவனைப் பற்றி எடுத்துக் கூறும் சிவஞானபோதம் முதலிய சாத்திர நூல்கள் எல்லாம் காணப்பட்ட உலகத்தை வைத்துக் காணப்படாத இறைவனது உண்மையைக் கருதல் அளவையின் அடிப்படையிலே நிறுவுகின்றன. ஒரு பொருள் இருக்கிறது என்ற அளவில் அதனைச் செய்தவன் ஒருவன் உளன் என்று உறுதியாக அறியலாம். அது போலவே உலகம் என்பது உளது. இதனைச் செய்தவன் ஒருவன் உளன் என்று அறிதல் வேண்டும்.

இங்கே சிலருக்கு ஓர் ஐயம் எழலாம் அறிவியல் வளர்ச்சியிலே மிகவும் முன்னேறி இருக்கிற காலம் இது. இப்போது கணிப்பொறிகளும் ரோபாட் என்ற இயந்திர மனிதனும் சாதாரண மனிதர்களால் செய்ய முடியாத வேலைகளைக் கூடச் செய்கின்றன. இது போல சடப் பொருள்களும் தாமாகச் செயல் படுகின்றன என்று கொண்டால் என்ன? என்று சிலர் கேட்கலாம்.

செயல்படுவதற்கு அறிவு தேவை. அறிவற்ற பொருள்கள் தாமாகச் செயல்படுவதில்லை. எடுத்துக்காட்டாக ஒரு கல் தானாகவே நிலத்தில் இருந்து எழுந்து மேல்நே க்கிப் பாய்ந்து மாம்பழத்தை அடித்து வீழ்த்துவதில்லை. அறிவுடைய ஒருவனால் எறியப்பட்ட கல்லே மாங்கனியை வீழ்த்தும். சில வேளைகளில் கடும் மழையினால் ஏற்படுகின்ற வெள்ளப்பெருக்கு ஒரு கல்லை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகர்த்தலாம். ஆனால் அத்தகைய நகர்வு நோக்கமும் குறிக்கோளும் உடையதன்று. எனவே எந்தச் செயல்பாட்டின் பின்னணியிலும் ஓர் அறிவுடைப் பொருள் இருத்தல் வேண்டும் என்பது உறுதியாகிறது. விந்தை மிகுந்த இந்த உலகத்தையும் தோற்றுவித்துக் காத்து ஒடுக்குகின்ற பேரறிவாளன் ஒருவன் வேண்டும் அவனே இறைவன்.

இக்கருத்து சிவஞானசித்தியாரில் ''ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகம் எல்லாம், வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே, தருபவன் ஒருவன் வேண்டும்'', (சித்தியார் சுபக்கம்-21) என்று விளக்கப்படுகிறது. உலகத்தின் தோற்றமும் இருப்பும் ஒடுக்கமும் நியதிக்கு உட்பட்டே நடைபெறுகின்றன என்பதை ஆசிரியர் இச்செய்யுள் வரிகளால் உணர்த்துகிறார்.

### உலகம் உள் பொருளா ?

உலகம் என்பது உள் பொருளா ? அல்லது உள்ளது போலத் தோற்றும் உருவெளித் தோற்றமா ? அது படைக்கப்பட்டதா ? தானாகத் தோன்றியதா ? படைக்கப்பட்டதெனின் எதிலிருந்து படைக்கப்பட்டது ? வெறும் பாழிலிருந்து தோன்றியதா ? இது எப்போதும் ஒரு தன்மையாக இருந்து கொண்டிருக்குமா ? அல்லது முற்றிலும் அழிந்து போகுமா ? அழிந்த பின் என்னவாகும் ? என்றெல்லாம் பல கேள்விகள் உலகத்தைப் பற்றியே கேட்கப்படும். இக்கேள்விகளுக்கு ஒவ்வொரு சமயமும், தத்துவமும் வெவ்வேறு விடைகளைத் தருகின்றன. இவற்றுக்கு சைவ சித்தாந்தம் கூறுகிற விடைகளை மட்டிலும் நாம் இங்கே காணுவோம்.

உலகம் என்பது உள்பொருளே. அதனை உருவெளித்தோற்றம் என்று கொள்வது பொருந்தாது. முன்பே கூறியபடி பேரறிவுடைய ஒருவனால் படைக்கப்பட்டே இவ்வுலகம் தோன்றி இருக்க முடியும். தானாகத் தோன்றி இருத்தல் முடியாது. உள்ள பொருள் அழியாது, இல்லாத பொருள் தோன்றாது என்பது ஒரு பேருண்மை. இதனைச் சற்காரிய வாதம் என்பர். அதாவது படைப்பு என்பது வெறும பாழிலிருந்து, இதற்கு முன் இல்லாத ஒரு பொருள் உண்டாக்கப் படுவது என்று பொருள்படாது. காரணத்தில் நுட்பமாக இருந்த ஒன்று காரியப்பட்டுத் தோன்றுவதே படைப்பு என்று சொல்லப்படும். பஞ்சிலிருந்து நூலும், நூலிலிருந்து ஆடையும் தோன்றுவதை இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

**சற்காரிய வாதம்**

உள்ள பொருள் அழியாது இல்லாத பொருள் தோன்றாது என்ற கொள்கைக்கு சற்காரிய வாதம் என்று பெயர் வழங்கும். இல்லாத பொருளே தோன்றும் என்ற கொள்கை அசற்காரிய வாதம் எனப்படும். சைவ சித்தாந்தம் சற்காரிய வாதத்தை ஏற்றுக் கொண்டு, அசற்காரிய வாதத்தை மறுக்கிறது.

மாயை என்ற மிக நுட்பமான பொருளிலிருந்து இறைவனால் இவ்வுலகம் தோற்றுவிக்கப்படுகிறது என்பது சைவ சித்தாந்தம். மாயை பற்றிய விளக்கம் இதன் பின் வருகிற இயலில் இடம் பெறுகிறது.

**உலகம் முத்தொழிற்படும்**

உலகம் என்பது எப்போதும் ஒரு தன்மையாக இருப்பதில்லை. அது முத்தொழிற்படும் என்பதே சைவ சித்தாந்தக் கொள்கை. முத்தொழில்களாவன தோற்றம், இருப்பு, ஒடுக்கம் என்பன. ஒரு மரம் முளைக்கிறது சில ஆண்டுகள் இருந்து பயன் தருகிறது. அதன் பின்னர்ப் பட்டுப் போய் அழிகிறது. ஒரு தனி மரத்துக்கு உள்ள இந்த இயல்பு, மரம் என்ற இனம் முழுமைக்கும் பொருந்தும். மழைக்காலத்தில் ஈசல் என்ற பூச்சி வகை ஒருசேரத் திடீர் என்று தோன்றி, ஒருசேர மாய்வதை நாம் கண்டிருக்கிறோம். அது போலவே உள்ளது என்று சொல்லப்படுகிற இவ்வுலகம் எப்போதோ ஒரு காலத்தில் முற்றிலும் அழியும். ஏனெனில் இருப்பு என்ற இயல்பு அதற்கு முன் தோற்றம் என்ற ஒன்றினையும், அதன் பின்னர் ஈறு என்ற ஒன்றினையும் கொண்டதாகவே இருக்கமுடியும் இதனையே மெய்கண்ட தேவர் ''தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்'' என்று (சிவஞான போதம் முதல் நூற்பா முதல் அதிகரண ஏது) என்று அருளுகிறார்.

**உலகம் ஒடுங்கி உளதாகும்**

இவ்வாறு படைக்கப்பட்டுச் சில காலம் இருந்து காக்கப்பட்டு இறைவனால் ஒடுக்கப்படும் உலகம் ஒடுங்கியே போகாமல் மீண்டும் தோற்றுவிக்கப்படும். இந்த இடத்தில் ஒரு கேள்வி எழுப்பப்படும். ஒடுக்கப்பட்ட உலகத்தை இறைவன் மீண்டும் தோற்றுவிப்பானேன்? அது வீண் வேலையன்றோ? அப்படியானால் ஒடுக்காமலே இருந்திருக்கலாம் அன்றோ?

இவற்றுக்கு சைவ சித்தாந்தம் பொருத்தமான விடைகளைத் தருகிறது. படைப்பு முதலிய மூன்று தொழில்களும் இறைவனால் தனக்காகச் செய்யப்படுவன அல்ல. உயிர்களின் பொருட்டே இறைவன் முத்தொழில்களையும் செய்கிறான் உயிர்கள் தோற்றமில் காலந்தொட்டே ஆணவம் என்னும் மலத்தினால் பற்றப்பட்டுத் தமது அறிவையும் செயலையும் இழந்து கிடக்கின்றன. அது மட்டுமன்று. உயிர்கள் தமது இழிநிலையை அறியாமலும் உள்ளன. இத்தகைய நிலையில் கட்டுக்களிலிருந்து விடுபட அறியாதனவாக உள்ளன. உயிர்களின் கட்டுக்களை நீக்கி அவற்றின் அறிவை விரிவு செய்து விடுவிக்கின்ற ஆற்றல் இறைவன் ஒருவனுக்கே உண்டு. அவ்வாறு வீடு பேற்றை வழங்குவதற்காகவே, உயிர்களின் நன்மைக்காக இறைவன் முத்தொழில்களையும் இயற்றுகிறான்.

உயிர்களைப் பற்றியிருக்கும் ஆணவத்தைச் சிறிது சிறிதாக அகற்றி அவற்றுக்குப் பக்குவத்தை வழங்குவதற்காக இறைவன் படைப்புத் தொழிலை மேற்கொள்ளுகிறான். உயிர்களின் வினைகள் முதிர்ந்து அவற்றின் பயன்கள் உயிர்களைப் பொருந்துவதற்காக இறைவன் உலகத்தை ஒடுக்கும் தொழிலை மேற்கொள்ளுகிறான். இவற்றைச் சுருக்கமாக கரும மலம் பக்குவப்படுதற் பொருட்டு ஒடுக்கத்தையும், ஆணவ மலம் பரிபாகம் அடைவதன் பொருட்டு உலகத்தை மீளப் படைத்தலையும் இறைவன் மேற்கொள்ளுகிறான் என்று பெரியோர் கூறுவர்.

முத்தொழில்களையும் ஐந்தொழில்களாக வகைப் படுத்திக் கூறும் மரபு உண்டு. அவை படைத்தல் காத்தல் மறைத்தல் ஒடுக்குதல் அருளல் என ஐந்தாகும். இவற்றுள் முதல் நான்கையும் பந்தம் என்ற தலைப்பிலும் அருளல் என்பதனை வீடு என்ற தலைப்பிலும் அடக்கி இறைவனின் தொழில்கள் இரண்டு என்று கூறுதலும் உண்டு. சிவஞான சித்தியாரில் ''பந்தமும் வீடுமாய பத பதார்த்தங்கள் அல்லான்'' (சித்தியார் சுபக்கம், 64) என்றும், ''பழிப்பு ஒழி பந்தம் வீடு பார்த்திடின் அருளே எல்லாம்'' (சித்தியார் சுபக்கம் 57) என்றும் அருளப்பட்டன.

இறைவன் மேற்கொள்ளுகிற தொழில்கள் எல்லாம் அவன் பொருட்டன்று. அவன் உயிர்களின் மேற்கொண்ட பெருங்கருணையினாலேயே ஆகும். ஏனெனில் தனக்கென எதுவும் வேண்டாத குறைவிலா நிறைவு உடையவனான இறைவனுக்கு இத்தொழில்களால் வரும் பயன் ஏதும் இல்லை.

## அலகிலா விளையாட்டு

இறைவனின் ஐந்தொழில்களையும் 'முன்னவன் விளையாட்டென்று மொழிதலும் ஆம்' என்றும் பெரியோர் கூறுவர். இக்கருத்து பிறசமயத்தாராலும் கொள்கையினராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று. பிரம சூத்திரத்தில் உலகம் என்பது வெறும் விளையாட்டே என்று கூறப்படுகிறது. கம்பரும் 'அலகிலா விளையாட்டு உடையார் அவர் தலைவர்' என்று கூறுகிறார். விளையாட்டு என்றதனால் இறைவனின் செயல்கள் யாவும் சிறுபிள்ளைகளின் விளையாட்டைப் போன்றது; நோக்கம் அற்றது; குறிக்கோள் இல்லாதது; வீண் செயல் என்று கொள்ளுதல் கூடாது. இறைவன் ஐந்தொழில்களையும் இயற்றும் போது அதற்கெனப் பெருமுயற்சி எடுத்துக் கொள்ளாமல் மிக எளிதாகச் செய்வான் என்ற பொருளிலேயே இதனைக் கொள்ளுதல் வேண்டும். இவற்றால் இறைவனுக்கு வரும் விகாரம் ஏதும் இல்லை. இவற்றை இறைவன் எவ்விதத் தோய்வும் இல்லாமல் தன் திரு உள்ளக் குறிப்பால் இயற்றுவான் என்றே கொள்ளுதல் வேண்டும். இதனைத் தன் சங்கற்ப மாத்திரையினால் செய்வன் என்று பெரியோர் சுருக்கமாகக் கூறுவர்.

## இறைவனின் தன்னியல்பு

இறைவன் என்பவன் எண் குணங்கள் உடையவன் என்பது முன்பே கூறப்பட்டது. அவன் சொல்லையும் மனத்தையும் கடந்தவன். அறிவே வடிவானவன். அவனுக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. பேரும் இல்லை, ஊரும் இல்லை. அவன் குறைவிலா நிறைவானவன். கோதிலா அமுதானவன். தன்னுடைய திருவருளோடும் பிரிப்பின்றி நிற்பவன். இவையே அவனுடைய சிறப்பியல்புகள் ஆகும்.

இறைவனுக்குக் கூறப்பட்ட எண்குணங்களையும் மூன்றாக அடக்கி அவன் சத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் விளங்குகிறான் என்றும் கூறுவர். இதனைச் சச்சிதானந்தம் என்பர். சத்து என்பது எப்போதும் ஒரே தன்மையாய் நிற்கும் செம்பொருளானவன் என்ற பொருளைத்தரும் சித்து என்பது முற்றறிவுடையவன் என்று பொருள்படும். ஆனந்தம் என்பது பேரின்பம் உடையவன் என்று பொருள் தரும்.

எண் குணங்களுள் தன்வயத்தனுதல் தூய உடம்பினனுதல், முடிவில் ஆற்றலுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல் என்ற நான்கும் சத்து என்பதனுள் அடங்கும். இயற்கை உணர்வினனுதல், முற்றறிவுடைமை, பேரருளுடைமை என்ற மூன்றும் சித்து என்பதனுள் அடங்கும். வரம்பில் இன்பமுடைமை ஆனந்தமாகும்.

**இறைவனின் பொது இயல்பு**

இறைவனுகிய சிவபெருமான் உயிர்களின் மீது கொண்ட பெருங்கருணையால் ஐந்தொழில்கள் இயற்றும் நிலை பதியின் பொது வியல்பு எனப்படும். இறைவன் பொது, சிறப்பு ஆகிய இருநிலைகளிலும் தன்னுடைய சிற்சத்தியாகிய திருவருளோடு பிரிப்பின்றியே நிற்பான். இவ்வாறு திருவருளோடு பிரிப்பின்றி நிற்கும் நிலை தாதான் மியம் எனப்படும் இதனை ஒருமையின் இருமை என்பர். இறைவனுடைய சிற்சத்தி அவனது திருவருளே ஆகும். ''தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும் சத்தி, பின்னமிலான் எங்கள் பிரான்'' (திருவருட்பயன், 2) என்று உமாபதி சிவம் இதனை விளக்குகிருர்.

சூரியன் உலகத்தில் உள்ள இருளைப் போக்குகிருன். அதாவது சூரியனின் கதிர்கள் ஒளிக்கற்றைகளாகி உலகத்தில் பரவும் போது உலகைக் கவ்வி இருந்த இருள் விலகுகிறது சூரியன் வேறு அவனுடைய கிரணங்கள் வேறு என்று ஒரு போதும் தனித்தனி பிரிந்து நிற்பதில்லை. ஆயினும் அவற்றை ஞாயிறு என்றும் ஞாயிற்றின் கதிர்கள் என்றும் வழங்குகிருேம். இதுவே இறைவனுகிய சிவத்துக்கும் அவனுடைய சத்திக்கும் பொருந்தும் உவமையாகும்.

சிவஞான சித்தியாரில் இக்கருத்து இவ்வுவமையோடு பொருத்திக் காட்டப் பெற்றுள்ளது.

> **''அருளது சத்தி ஆகும் அரன் தனக்கு அருளை இன்றித்**
> **தெருள் சிவம் இல்லை அந்தச் சிவம் இன்றிச் சத்தி இல்லை**
> **மருளினை அருளால் வாட்டி மன்உயிர்க்கு அளிப்பன் கண்கட்கு**
> **இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்''**
>
> *(சுபக்கம் 239)*

**நவந்தரு பேதம்**

சிவமும் சத்தியுமாக உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் நடத்தும் போது இறைவன் ஒன்பது வகையான திருமேனிகளைக் கொள்ளுவான் என்பர். இதனை நவந்தரு பேதம் அதாவது ஒன்பது வகையான திருவடிவ வேறுபாடுகள் என்று கூறுவர் சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவம் மகேசுவரன் உருத்திரன் மால் அயன் என்பன இந்த ஒன்பது திருவடிவங்களாகும் இறைவன் இவ்வாறு ஒன்பது

வடிவங்கள் கொள்ளும் போது அவனை விட்டு நீங்காத சிவசத்தி ஏழு பெயர்களைப் பெறும். சத்தி விந்து மனோன்மணி மகேசை உமை திரு வாணி என்பன சத்தியின் பெயர்களாகும். இவ் ஒன்பதில் சிவம் நாதம் சதாசிவம் மகேசன் உருத்திரன் அரி அயன் ஆகிய ஏழும் சிவ பேதங்கள். சத்தி விந்து என்ற இரண்டும் சக்தி பேதங்கள். எனவே சிவ பேதம் ஏழு சத்தி பேதம் ஏழு என்பதுவே சித்தாந்தக் கொள்கை யாகும்.

இவ்வாறு கூறப்படுகின்ற போதிலும் இறைவன் ஒருவனே; இங்ஙனம் வரும் சத்தியும் ஒருத்தியே. சிவஞான சித்தியாரில் ''நவந் தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்'' (சுபக்கம், 164) என்றும் ''இங்ஙன் வரும் சத்தி ஒருத்தியாகும், எத்திறம் நின்றான் ஈசன் அத் திறம் அவளும் நிற்பள்'' (சுபக்கம் 165) என்று இக்கருத்துகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

**உருவமா ? அருவமா ?**

இவ்வாறு ஐந்தொழிலும் செய்கின்ற இறைவன் உருவம் உடையவனா ? அல்லது உருவமற்ற அருவமானவனா ? என்று வினா எழும். மற்றைச் சமயங்களில் கடவுளை ஒன்று, உருவம்உடையவராகக் கொள்வர் அல்லது அருவமானவராகக் கொள்வர். சைவ சித்தாந்தக் கொள்கையின்படி இறைவன் உருவமானவன், அருவமானவன், உரு வருவும் ஆனவன். இவற்றுள் ஏதாவது ஒன்றே இறைவனுக்கு உரிய வடிவம் என்று கொண்டால், மற்றை இரண்டினையும் அவனால் கட்டுப் படுத்த முடியாது என்று ஆகும். அதாவது இறைவன் உருவம் உடையவன் எனில் அருவப் பொருளையும் அருஉருவப் பொருளையும் அவனால் கட்டுப்படுத்த இயலாது. இறைவன் அருவம் எனின் அது போன்றே மற்றைய இரண்டும் அவன் ஆட்சிக்கு அகப்படா. அது மட்டும் அல்லாமல், இவற்றுள் ஏதாவது ஒன்று என்று இறைவனைக் கூறினால் அவர் உலகத்துப் பொருள்களில் ஒன்றாவர்.

இக்கருத்தை சிவஞானசித்தியார், ''அருவமும் உருவா ரூபம் ஆனதும் அன்றி நின்ற உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக்கு உள்ளவாமே'' (சுபக்கம், 58) என்று விளக்குகிறது.

இறைவன் உருவம் உடையவன் என்று கொள்ளும்போது அவனுடைய திருமேனியும் நம்முடைய உடல்களைப் போல அமைந்தது தானோ என்ற ஐயம் எழும். மாந்தர் உடல்களைக் கருமேனி என்று வழங்குவர். ஏனெனில் அவை கருப்பையிலிருந்து தோன்றியவை. அவை வினையில் வந்தவை; வினைக்கு விளைவானவை. அதுவல்லாமல் அவை மாயா காரியத் தொகுதியாகும். ஆனால் இறைவன் மேற்கொள்ளுகின்ற வடிவங்கள் திருமேனி எனப்படும். அத்திருமேனி

அவனுடைய திருவருளேயாகும். அவன் கொள்ளுகின்ற திருமேனி நம் பொருட்டே ஆகும். ''அருள் உரு உயிருக்கு என்றே ஆக்கினன் அசிந்தன் அன்றே'' (சித்தியார் சுபக்கம், 67) என்பது அருள் நந்தி சிவனார் திருவாக்கு.

சிவபெருமான் பிறவா யாக்கைப் பெரியோன் ஆகையினாலே அவன் அவதாரம் செய்வான் என்று சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொள்வதில்லை. சில மதத் தலைவர்களைச் சிவபெருமானுடைய அவதாரம் என்று சிலர் கூறுவது சைவ சித்தாந்தக் கொள்கையின்படி சிவ அபராதம். ''நிறுத்திடும் நினைந்த மேனி நின்மலன் அருளினாலே'' (சித்தியார் சுபக்கம், 65) என்பதே சைவ சித்தாந்தக் கொள்கை.

சொல்லுக்கும் மனத்துக்கும் எட்டாத இறைவன் எதற்காகத் திருவுருவம் கொள்ளுதல் வேண்டும் என்ற கேள்விக்கு, இறைவன் திருமேனி கொண்டே வேதங்களையும் ஆகமங்களையும் அருளிச் செய்தான் என்று சைவ சித்தாந்தம் விடை கூறுகிறது. அவ்வாறு அவற்றை இறைவன் அருளாவிடில் உலகத்துக்கு உய்யும் நெறி காட்டுவார் யாரும் இலர் வழிவழியாக வருகிற ஞானாசிரியர் பரம்பரையும் உலகினுக்குக் கிட்டாது. (சித்தியார் சுபக்கம் 66 காண்க).

## இறைவனின் மூவகை வடிவங்கள்

இறைவனின் திருவடிவங்களை போக வடிவம், யோக வடிவம், வேக வடிவம் என்று மூன்றாகக் கூறுவர். சிவமும் சத்தியுமாக இருந்து உயிர்களுக்கு இன்பத்தை ஊட்டுவதற்காக இறைவன் மேற் கொள்ளும் வடிவம் போக வடிவமாகும். உயிர்களின் மல மாசுகளைத் துடைத்து அவற்றுக்கு மெய்ஞ்ஞானத்தை வழங்குவதற்காக அவன் கொள்ளும் திருமேனி யோக வடிவம் எனப்படும். உலகில் தீமைகள் தோன்றும் போது அவற்றை ஒறுப்பதற்காக அவன் தாங்கும் திருமேனி வேக வடிவம் எனப்படும் வேக வடிவமும் இறைவனின் திருவருளேயாகும். ஏனெனில் சிவபெருமான் வேக வடிவம் கொண்டு தீவினையை வேரறுக்கிறாரே அல்லாமல் தீயவர்களை அழிக்கிறார் என்று பொருள் அன்று. இதனைச் சிவஞானசித்தியார் ''கொன்றது வினையைக் கொன்று நின்ற அக்குணம் என்று ஓரார்'' (சுபக்கம், 71) என்று நயம்படக் கூறுகிறது.

சிவம் சத்தி நாதம் விந்து என்பன அருவத்திருமேனிகளாகும். இவற்றை நிட்களம் என்பர். சதாசிவம் என்பது அருஉருவத் திருமேனி. இதுவே திருக்கோயில்களில் கருவறையில் எழுந்தருளி இருக்கும் சிவலிங்கத் திருமேனியாகும். இதனைச் சகள நிட்களம்

என்பர். உருவத் திருமேனிகளாவன மகேசுர மூர்த்தங்கள் ஆகும். இவை இருபத்தைந்து என்பர். இவற்றைச் சகளம் என்று வழங்குவர். அவை பின்வருமாறு :-

1) சந்திரசேகரர்
2) உமாசகாயர்
3) இடபாரூடர்
4) நடராசர்
5) கல்யாணசுந்தரர்
6) பிட்சாடனர்
7) காமாரி
8) காலாரி
9) திரிபுராரி
10) சலந்தரர்
11) கயாரி
12) வீரபத்திரர்
13) அரியர்த்தர்
14) அர்த்தநாரீசுவரர்
15) கிராதமூர்த்தி
16) கங்காளர்
17) சண்டேச அனுக்கிரகர்
18) திருநீலகண்டர்
19) சக்கரநாதர்
20) விக்கினபிரசாதர்
21) சோமாஸ்கந்தர்
22) ஏகபாதமூர்த்தி
23) சுகாசனர்
24) தட்சிணாமூர்த்தி
25) லிங்கோத்பவர்

இவையும் தவிர இறைவனை அட்டமூர்த்தி என்ற பெயரால் வழங்குவதும் உண்டு அதாவது இறைவன் ஐம்பூதங்களையும் திங்களையும் ஞாயிற்றையும் இயமானன் என்னும் ஆன்மாவையும் தன் திருமேனியாகக் கொண்டவன் என்றும் கூறுவர். 'அட்டமூர்த்தமாம் வாழ்வே' என்பது குமரகுருபரர் திருவாக்கு.

மற்றொரு வகையாகவும் சிவபெருமானின் திருமேனிகள் வகைப்படுத்தப் பெறும் அவை இலயம், போகம், அதிகாரம் என்பன. சிவம் சத்தி என்ற இரண்டும் உலகம் யாவும் ஒடுங்குதற்கு இடமாய் விளங்குவதால் அவை இலயம் எனப்படும். சதாசிவம் மற்றையத் திருமேனிகளைத் தோற்றுவித்தலால் போகம் என வழங்கும் மகேசுவரமூர்த்தங்களான இருபத்தைந்தும் சுத்தவித்தையில் தோன்றுவனவாகிய அயனும் மாலும் உலகைத் தோற்றுவித்து அளித்துத் துடைப்பதனால் அதிகாரம் என வழங்கும்.

**அத்துவிதம்**

இறைவன் உயிர்களோடு ஒன்றாயும் உடனாயும் வேறாயும் நின்று அவற்றுக்கு உதவி அருள்கிறான் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. இவ்வாறு இறைவன் உயிர்களோடு கொண்ட தொடர்பினை சுத்தாத்துவிதம் என்ற சொல்லால் குறிப்பிடுவர்.

அத்துவிதம் என்ற வடசொல்லுக்கு இரண்டற்ற தன்மை என்று பொருள். இறைவனும் உயிரும் ஒன்றா வேறா என்ற கேள்விக்கு விடையாக இறைவன் உயிர்களோடு அத்துவிதமாய் நிற்பன் என்று கூறப்படுகிறது.

திருஞானசம்பந்த நாயனுர் திருவீழிமிழலைத் தேவாரத்தில்,

**''ஈருய் முதல் ஒன்ருய் இரு பெண் ஆண் குணம் மூன்ருய்**
**மாருமறை நான்காய் வரு பூதம் அவை ஐந்தாய்**
**ஆருர் சுவை ஏழு ஓசையோடு எட்டுத் திசை தாளுய்**
**வேருய் உடன் ஆனுன் இடம் வீழிம் மிழலையே''**

என்று (1-11-2) அருளியுள்ளார். இதிலே தானுய் வேருய் உடன் ஆனுன் என்ற சொற்கள் இறைவனின் அத்துவித நிலையைக் குறிக்கின்றன. இக்கருத்தே மெய்கண்ட தேவநாயனுரால் சிவஞான போதம் இரண்டாம் நூற்பாவில் ''அவையே தானேயாய்'' என்ற சொற்களால் உணர்த்தப்படுகிறது. மாதவச் சிவஞான முனிவர் இச்சொற்களுக்குப் பொருள் காணும் பொழுது அவற்றை இரட்டுற மொழிந்து கொண்டு அவையேயாய், தானேயாய், அவையே தானேயாய் என்று பிரித்துக் கூட்டிப் பொருள் காணவேண்டும் என்று விளக்கம் தருகிருர்.

ஆதிசங்கரர், இராமாநுசர், மாத்துவர் ஆகிய பிற சமய ஆசிரியர்கள் அத்துவிதம் என்ற சொல்லுக்கு அளித்த விளக்கங்களைச் 'சைவ சித்தாந்தம் ஏற்பதில்லை. ஆதிசங்கரர் அச்சொல்லை அபேதம் அதாவது வேற்றுமையின்மை என்று கொண்டார். அதற்கு உவமையாகப் பொன்னும் அணிகலனும் போல' என்று உரைத்தார். இராமாநுசர் அத்துவிதம் என்ற சொல் பேதாபேதம் அதாவது வேற்றுமையில் ஒற்றுமை என்ற பொருளைக் கொண்டார். அவர் காட்டிய உவமை 'சொல்லும் பொருளும் போல' என்பதாகும். மாத்துவர் அத்துவிதம் என்ற சொல்லே பேதம் அதாவது வேற்றுமை என்பதை உணர்த்துகிறது என்று கொண்டார். அதற்கு உவமையாக இருளும் ஒளியும் போல என்று உரைத்தார். இக்கொள்கைகள் சைவ சித்தாந்தத்தில் மறுக்கப்படுகின்றன.

கலப்பினுல் ஒன்ருயும், பொருள் தன்மையால் வேருயும் உயிருக்கு உயிராகும் தன்மையால் உடனுயும் நிற்கும் நிலையே சைவ சித்தாந்தம் காட்டும் அத்துவிதமாகும். இம்மூன்றற்கும் உவமைகளாக உடலும் உயிரும் போல ஒன்ருயும், கண்ணும் ஞாயிறும் போல வேருயும், அறிவும் ஒளியும் போல உடனுயும் இறைவன் உளன் என்று சித்தாந்தத் தெளிவு வலியுறுத்தப்படுகிறது.

**''... ... பொன் பணி போல் அபேதப்**
**பிறப்பு இலதாய்; இருள்வெளிபோல் பேதமும்; சொற்பொருள் போல்**
**பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன**

அறத்திறனுல் விளைவதாய் உடல்உயிர், கண் அருக்கன்
அறிவொளிபோல் பிறிவுஅரும் அத்துவிதம் ஆகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கல் உற்ரும்''

(சிவப்பிரகாசம், 7) என்ற உமபாதிசிவஞர் திருவாக்கு ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது.

**காணும் உதவியும் காட்டும் உதவியும்**

சிவபெருமான் உயிர்களுடன் இரண்டறக் கலந்து நிற்பதாகிய அத்துவித நிலையை எதற்காக மேற்கொள்ள வேண்டும்? இதற்கு விடையாக, இறைவன் உயிர்களுக்கு இரண்டு வகையாக உதவுகிருன்; அவை காணும் உபகாரம் என்றும் காட்டும் உபகாரம் என்றும் கூறப் படும் என்பர். உயிர்கள் அறிவுடையனவே எனினும் அவற்றின் அறிவு சிற்றறிவு ஆகும். சிவபெருமான் அவற்ருேடு சேர்ந்து இருந்து அவற்றை இயக்கவில்லை எனில் அவற்றுக்குச் செயற்பாடு இல்லை. பொருள்களைக் காண்பது ஒருவனின் கண் என்கிருேம். ஆனுல் ஆழ்ந்து சிந்திக்கும் போது அவனுடைய கண்கள் காண்பதில்லை எனபது புலப்படும். உயிரே பொருள்களைக் காண்கிறது. காணும் தன்மை உடைய கண்களுடன் கலந்து நின்று உயிர் கண்களைக் காணுமாறு செய்வதுடன் தானும் காண்கிறது. சிவபெருமானுடைய சிற்சத்தி உயிர்களின் சிற்சத்தியுடன் கலந்து நின்று தானும் கண்டு உயிர் களுக்குக் காட்டியருளுகிறது.

சிவபெருமான் உயிர்களின் உடனுய் நின்று காண்பதைக் காணும் உபகாரம் என்றும் வேருய் நின்று காட்டுவதைக் காட்டும் உபகாரம் என்றும் குறிப்பிடுவர். ''காண்பார் யார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே'' என்ற அப்பர் தேவாரம் (6-5-93) இக்கருத்தை வலியுறுத்துகிறது. இறைவன் உயிர்களோடு உடனுய் நின்று காணும் போது தான் அக்காட்சியில் தோய்வின்றி நிற்கிருன் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

சிவஞான போதம் பதிஞேராம் நூற்பாவின் பேருரையில் காணும் உபகாரம் காட்டும் உபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழும் என்று மாதவச் சிவஞான முனிவர் உரை வரைந்தமையும் ஊன்றி உணரத்தக்கது.

# இயல் மூன்று
## உயிர்கள்

உயிர்கள் படைக்கப்பட்டனவா? என்ற வினாவிற்கு அல்ல என்று விடையிறுக்கின்றன இந்தியச் சமயங்கள் பல. இப்போது பெரும்பான்மையான மக்கள் உயிர்களையும் இறைவன் படைத்தான் என்றே நம்புகின்றனர். இதற்குக் காரணம் மேலை நாட்டுச் சமயங்களான கிறித்தவமும் இசுலாமும் உயிர்கள் இறைவனால் படைக்கப் பட்டவை என்று கொள்ளுவதும், அக்கருத்தே பெரும்பாலாகப் பரப்பப்பட்டதும் ஆகும் எனலாம்.

இந்திய மெய்ப் பொருள் இயலில் ஆத்திக சமயங்களும் உண்டு. நாத்திக சமயங்களும் உண்டு நாத்திக சமயங்களான லோகாயதம் சாருவாகம் போன்றனவும் உயிர் அல்லது ஆன்மா என்ற பொருளே இல்லை என்று வாதிடுகின்றன. பௌத்தர்களில் சூனியான்மவாதிகளும் இக்கருத்தே உடையவர்கள். ஆத்திகக் கொள்கைகளில் சங்கரரின் ஏகான்மவாதம் தவிர மற்றைய தத்துவங்கள் அனைத்தும் உயிர்கள் பல என்ற கொள்கையை உடன்படுகின்றன. சைவ சித்தாந்தத்தின் கருத்து உயிர்கள் எண்ணிறந்தன என்பதாகும். அவ்வாறே உயிர்கள் என்றும் உள்ள பொருள் என்பதும் சித்தாந்தக் கொள்கையாகும்.

உயிர் அல்லது ஆன்மா என்ற தனித்த பொருள் ஒன்று உண்டா? என்ற கேள்விக்கு விடை சிவஞான போதத்தில் மூன்றும், நான்காம் நூற்பாக்களில் எடுத்துரைக்கப்படுகின்றன. சிவஞான போதத்தின் மூன்றும் நூற்பாவில் மற்றைச் சமயங்களில் கூறப்படுகிற உயிர் பற்றிய ஏழு கொள்கைகள் மறுக்கப் படுகின்றன. நான்காம் நூற்பாவில் உயிர் பற்றிய எட்டாவது கொள்கை மறுக்கப் படுகிறது.

இறைவன் ஒருவன் உண்டா? என்ற கேள்விக்கு ஒரு நாத்திகன் இல்லை என்ற ஒரே சொல்லாலேயே மறுப்புத் தெரிவித்தல் கூடும். ஆனால் உயிர் அல்லது ஆன்மா என்ற ஒரு பொருள் உண்டா என்ற கேள்வியை அத்துணை எளிதில் மறுத்துவிட இயலாது. ஏனெனில் உயிரோடு கூடிய உடல் உண்டு உயிர்த்து உற்று அறிவதையும் உயிர் நீங்கிய உடல் செயலற்றுக் கிடந்து அழிவதையும் கண்கூடாகக் காண்கிறோம். எனவே எது உயிர் என்பது தான் இங்கு எழுகிற கேள்வியே தவிர வேறன்று.

சிவஞான போதத்தின மூன்றுவது நூற்பா,

> **"உளதுஇலது என்றலின் எனதுடல் என்றலின்**
> **ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படின்**
> **உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
> **மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா"**

என்று அறிவுறுத்துகிறது. அந்நூலின் நான்காவது நூற்பா

"அந்தக்கரணம் அவற்றின் ஒன்றுஅன்று
அவை சந்தித்தது ஆன்மா........"

என்று அறிவுறுத்துகிறது.

1. இலது என்றலின் ஆன்மா உளது உயிர் எனத் தனித்த பொருள் ஒன்று இல்லை என்று கூறுவோர் சூனியான்மவாதிகள் எனப் படுவர். அவர்கள் கூற்றை வைத்தே அவர்களை மறுக்கிறார் மெய்கண்ட தேவநாயனார். உடம்பின் ஒவ்வொரு உறுப்பாகக் கண்டு 'இது ஆன்மா அன்று; இது ஆன்மா அன்று' என்று கழித்து நிற்பது எதுவோ அதுவே ஆன்மா ஆகும் மேம்போக்காகப் பார்க்கின்ற போது இல்லை என்பதனாலே உண்டு எனக் கூறும் இக்கூற்று முரண் பட்டது போலத் தோன்றும். ஆயினும் இது முரணாகாது. பத்துப் பேர் இருக்கிற கூட்டத்தில் ஒரு நிகழ்ச்சி பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையாகக் கூறுகிறார்கள். இறுதியாக ஒருவன் எழுந்து "எல்லாரும் பொய் சொல்லுகிறார்கள். நான் சொல்லுகிறேன் கேளுங்கள்" என்று பேசத் தொடங்குகிறான். இந்த இடத்தில் எல்லாரும் என்ற சொல் அவனைத் தவிர்த்த மற்றவர்களையே குறிக்கும். அதுபோல ஆன்மா இல்லை என்று கழிக்கிற உணர்வு எதுவோ அதுவே ஆன்மாவாகும் என்று நிறுவுகிறார் ஆசிரியர்.

2. எனது உடல் என்றலின் அதனினும் வேறாக ஆன்மா உளது. காட்சி அளவை ஒன்றையே ஏற்புடையதாகக் கொள்ளும் உலகாயதர்கள் இப்பரு உடலே ஆன்மா என்றும் அதைத் தவிர ஆன்மா ஒன்று இல்லை என்றும் வாதிடுவர். அவர்களை மறுத்து எனது வீடு என் மனைவி என்று வழங்குவதைப் போலவே எனது உடல் என்பதும் பிறிதின் கிழமைப் பொருள் தருவது. ஆகையினாலே உடலுக்கு வேறாக ஆன்மா ஒன்று உண்டு என்பது மெய்கண்ட தேவநாயனாரால் நிறுவப்படுகிறது.

3. ஐம்புலன்களையும் ஒருங்கே அறிகிற ஆன்மா அவற்றுக்கு வேறாக உண்டு. உண்மையில் அறிவு என்பது ஐம்பொறிகளின் வாயிலாக நிகழ்கின்றது. எனவே அவற்றையே ஆன்மாவாகக் கொள்ளுதல் வேண்டுமேயன்றி ஆன்மா என்ற தனித்த பொருள் இல்லை என்று சிலர் வாதிடுவர். இவர்களை இந்திரிய ஆன்மவாதிகள் என்பர்.

கண்ணுக்குக் காண மட்டிலுமே இயலும். காதினால் கேட்க மட்டுமே முடியும். இப்படி ஒவ்வொரு பொறியும் ஒவ்வொரு புலனையே அறியும். அதுவும் அல்லாமல் இவை தம்முள் ஒன்றை ஒன்று அறிய மாட்டா. எனவே இவற்றை ஆன்மா என்று கூறுதல்

பொருந்தாது. ஐம்பொறிகளாலும் வருகின்ற அறிவுகள் அனைத்தையும் ஒருங்கே அறிவது எதுவோ அதுவே ஆன்மா எனப்படும் என்று நிறுவுகிறுர் மெய்கண்ட தேவர்.

4. ஒடுக்கம் அறிதலின் நுண்ணுடலுக்கு வேருக ஆன்மா உண்டு. சிலர், கண்ணுக்கு புலப்படாததாகிய நுண்ணுடலை ஆன்மா என்று வாதிடுவர். நுண்ணுடல் புரியட்ட தேகம் என்றும் பெயர் பெறும். இவர்கள் கொள்கைப்படி பரு உடல் ஆன்மா அன்று. ஆனல் பரு உடலையும் இயக்குகின்ற ஆற்றலுடைய நுண்ணுடலே ஆன்மா ஆகும். இக்கொள்கையினர் சூக்கும தேகான்ம வாதிகள் எனப்படுவர்.

கனவு காணும் பொழுது பரு உடல் செயலற்றுக் கிடக்க நுண்ணுடலே செயல்படுகிறது. ஆயினும் கனவிலிருந்து விழித்து எழுந்த பின் கனவில் கண்டவற்றைக் கண்ட வண்ணமே அறியாது மயங்கியே அறிகிறேம். நுண்ணுடலே ஆன்மாவாயின் இவ்வாறு மயக்கம் நேர்வதற்குக் காரணம் இல்லை. ஆன்மா என்பது நுண்ணுடல் அன்று; அதனினும் வேருனது என்பது ஆசிரியர் மெய்கண்ட தேவநாயஞரால் இவ்வாறு நிறுவப்பட்டது.

5. உறங்கும் காலத்தும் தொழிற்படுவதாகிய உயிர்க் காற்றுக்கு வேருக ஆன்மா உண்டு. சிலர் உயிர்க் காற்றையே (பிராண வாயுவையே) ஆன்மா எனக் கூறுவர். அவர்கள் கருத்துப் படி மூச்சுக்காற்று ஆன்மாவாகும். ஏனெனில் அக்காற்று உடலை விட்டுப் பிரியும் பொழுதே உயிர் நீங்குகிறது. விழிப்பு நிலையிலும் கனவு நிலையிலும் உறக்க நிலையிலும் உடம்பை விட்டு நீங்காத உயிர்க் காற்று ஆன்மா என்பது இவர்கள் கொள்கை இவர்களைப் பிராணன்ம வாதிகள் என்று வழங்குவர்.

இவர்கள் கொள்கையை மறுத்து, விழிப்பு கனவு உறக்கம் ஆகிய மூன்று நிலைகளிலும் உயிர்க் காற்று இயங்கி வருகிறது. இருந்தாலும் ஒருவனது விழிப்பு நிலையிலே அவனுக்கு நுகர்வுகள் உளவாகின்றன. அது போலவே செயல்பாடும் விழிப்பு நிலையிலேயே உளதாகின்றது. கனவு நிலையில் நுண்ணுடம்புக்கு மட்டிலும் நுகர்வும் செயலும் உண்டு. உறக்க நிலையிலோ நுண்ணுடம்பும் பருவுடம்பும் நுகர்வும் செயல்பாடும் இன்றிக் கிடக்கின்றன. ஆனுலும் மூச்சுக் காற்று ஒரே சீராக இயங்குகிறது. என்வே அதனை இயக்கும் ஆன்மா மூச்சுக் காற்றினும் வேருக உள்து என்பது பெறப்படும். இவ்வாறு மெய்கண்டதேவர் பிராணன்மவாதிகளை மறுத்து அதனினும் வேருனது ஆன்மா என்று நிறுவுகிறுர். நுகர்வுகளை உண்டி என்ற சொல்லாலும் செயல்பாட்டை வினை என்ற சொல்லாலும் சிவஞான போத நூற்பாவில் குறிப்பிடுகிறுர்.

6. ஆன்மா உணர்த்த உணரும் தன்மையுடையது. ஆதலால் முற்றறிவுடைய பரம்பொருளுக்கு வேருக ஆன்மா என்ற பொருள் உண்டு. பிரமான்மவாதிகள் என்று வழங்கப்பெறும் ஏகான்மவாதிகள் உள்ள பொருள் ஒன்று. அதுவே பிரமம் என்று வாதிடுவர். உலகில் காணப்படும் பல்வேறு உயிர்களும் தனித்தனி வேறல்ல. அவை யாவும் பிரமப் பொருளின் விவர்த்தமே என்று கொள்ளுவர். விவர்த்தம் என்ற சொல்லுக்குத் தோற்றரவு என்பது பொருள்.

இவர்கள் கொள்கையை மறுத்து மெய்கண்ட தேவநாயஞர் சைவ சித்தாந்தக் கொள்கையை நிறுவுகிருர். பரம்பொருள் எனப்படும் பிரமம் முற்றுணர்வுடையது. அதனுடைய முற்றுணர்வு ஒரு போதும் மாறுதலுக்கு உட்படுவதன்று. பரம் பொருளின் பேரறிவு தாஞக உணரும் தன்மையினை உடையது. ஆஞல் உயிர்களின் சிற்றறிவோ தாஞக அறியும் தன்மையின்றி இறைவன் உணர்த்திஞலே உணரும் தன்மையை உடையது. அதுவுமன்றி 'ஒன்றனை அறிந்தும், ஒன்றனை அறியப் புகுவதாயும், முன் அறிந்தது ஒன்றனை அறியாது ஒழிந்தும், இங்ஙனம் ஒரோவொன்ருக அறியப்பட்ட விடயத்தையும இடையீடின்றி அறியமாட்டாது விட்டுவிட்டு ஆங்கே ஐந்து அவத்தைப்பட்டு அடங்கி மீள அறிந்து வருதல்'' (சிவஞான மாபாடியம் மூன்ரும் நூற்பா) ஆன்மாவின் இயல்பாகும். எனவே ஆன்மா அறிவுடைப் பொருளே ஆயினும் அதனை பிரமப் பொருள் என்று கொள்ளுதல் பொருந்தாது.

பரம்பொருளின் முற்றறிவு நுண்ணறிவு எனப்படும். ஆதலால் பரம்பொருள் சூக்கும சித்து என்று பெயர் பெறும். ஆன்மாவின் சிற்றறிவு பருமையுடைய அறிவு எனப்படும். ஆதலால் ஆன்மா தூல சித்து என்று பெயர் பெறும். எனவே பரம்பொருளுக்கு வேருக ஆன்மா என்ற ஒன்று உண்டு என்பது மெய்கண்ட தேவநாயஞரால் நிறுவப்படுகிறது.

இக்கருத்தை மிகவும் அருமையாக சிவஞானசித்தியாரில் அருள் நந்தி சிவம் பின்வரும் பாடலில் உணர்த்தியுள்ளார்.

**''அறிந்திடும் ஆன்மா ஒன்றை ஒன்றிஞல் அறிதலானும்**
**அறிந்தவை மறத்தலானும் அறிவிக்க அறிதலானும்**
**அறிந்திடும் தன்னையும் தான் அறியாமையானும் தானே**
**அறிந்திடும் அறிவன் அன்ரும் அறிவிக்க அறிவன் அன்றே**
(சித்தியார் சுபக்கம் 233)

7. பருவுடல் முதல் பலவகையாகக் கூறப்பட்ட ஐம்பொறிகள் அந்தக்கரணங்கள் நுண்ணுடல் உயிர்க்காற்று ஆகிய இவற்றின் கூட்டத்துக்கு வேருக ஆன்மா என்ற தனித்த பொருள் உண்டு.

பௌத்தர்களுள் சௌத்திராந்திகரும் வைபாடிகரும் மேலே கூறப் பட்ட பொருள்களின் கூட்டமே ஆன்மாவாகும் என்ற கொள்கையினை உடையவர்கள். எனவே இவர்களுக்கு சமூகான்மவாதிகள் என்று பெயர் வழங்கும். (சமூகம் — கூட்டம்)

மெய்கண்ட தேவநாயனூர் இக்கருத்தையும் மறுக்கிறார். இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெயரை உடையது. இவற்றின் கூட்டம் பல பொருள்களின் சேர்க்கையேயன்றி ஒரு பொருளாகக் கொள்ளப் படாது இவை யாவும் மாயையின் காரியங்கள். இவற்றினும் வேறாய் இவற்றினுள் நின்று இவற்றை இயக்கி இவற்றை அறிவது எதுவோ அதுவே ஆன்மா என்று மெய்கண்டார் நிறுவுகிறார். சிவஞான போதத்தின் மூன்றாவது நூற்பா ''மாயா இயந்திர தநுவினுள் ஆன்மா'' (உளது) என்று நிறைவு பெறுகிறது.

இதுவரை பிற சமயத்தாரால் சொல்லப்படும் ஏழு கருத்து கோள்கள் மறுக்கப்பட்டுச் சைவசித்தாந்தம் கொள்ளும் ஆன்மாவைப் பற்றிய கொள்கை நிறுவப்பட்டது. இவையாவும் சிவஞான போதத்தின் மூன்றாவது நூற்பாவில் இடம் பெற்றுள்ளன.

8. எட்டாவது கருதுகோள் சிவஞானபோதத்தின் நான்காவது நூற்பாவில் இடம் பெற்றுள்ளது. அந்தக்கரணங்களுக்கு வேறாக ஆன்மா உண்டு என்பதுவே அது. அந்தக்கரணங்கள் என்பன மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் நான்கு உட்கருவிகள் ஆகும். மனிதனுக்கு உடம்பில் வெளிப்புறத்தே அமைந்துள்ள கருவிகள் புறக்கரணங்கள் எனவும் இவை நான்கும் உட்கரணங்கள் எனவும் கூறப்படும். இவற்றையே உயிர் எனக் கொள்ளுவோர் அந்தக்கரண ஆன்மவாதிகள் எனப் படுவர்.

மனம் ஒரு பொருளைப் பற்றும். புத்தி என்பது அப்பொருள் இன்னது என்று உறுதி செய்யும். அகங்காரம் அப்பொருளின் தன்மையைப் பன்முறை எண்ணித் தெளிவேன் என்னும், சித்தம் சிர் தூக்கிப் பார்த்து அறியும். இவை ஒவ்வொன்றும் தத்தம் செயலைத் தாமே அறிய மாட்டாது. ஒன்று மற்றொன்றினையும் அறியாது. இவை நான்கின் பயனையும் அறிவது ஆன்மாவே ஆகும். ஓர் அரசனுக்குத் துணை நிற்கின்ற அமைச்சர்கள் போல உட்கரணங்கள் செயல்படுகின்றன அரசனைப் போன்று விளங்குவது ஆன்மா. எனவே ஆன்மா என்ற தனிப் பொருள் உண்டு.

எனவே ஆன்மா என்பது ஒரு தனித்த பொருள் என்று ஆசிரியரால் நிறுவப்பட்டது. அது மாயையிலிருந்து தோன்றியது அன்று. பரம்பொருளிலிருந்து தோன்றிய விவர்த்தமும் அன்று. தனிப் பொருளே என்று ஐயத்திற்கு இடமின்றி விளக்கப்பட்டது.

பிற சமயங்கள் பல மனிதனுக்கு மட்டிலுமே ஆன்மா உண்டு என்ற கொள்கையைக் கொண்டுள்ளன. செடிகொடிகள் பூச்சிகள் விலங்குகள் போன்ற உயிரினங்களுக்கு ஆன்மா கிடையாது என்பது அவற்றின் கருத்து. சைவ சித்தாந்தம் அறிவுடைய உயிரினங்கள் யாவும் ஆன்மாக்கள் உடையன என்று கொள்ளுகிறது ஓர் அறிவு உயிர் முதல் ஆறு அறிவுடைய மனிதன் வரை எல்லாமே உயிர் வகையைச் சேர்ந்தவை என்ற தொல்காப்பியரின் கருத்து இங்கு நினையத்தக்கது அறிவுள்ள பொருளைச் சேதனம் என்பர். அறிவில்லாத பொருளை அசேதனம் என்பர். சடப்பொருளுக்கு அறிவில்லை. எனவே அவற்றுக்கு ஆன்மாவும் இல்லை. மற்றைய உயிரினங்கள் யாவற்றுக்கும் ஆன்மா உண்டு என்பதே சைவ சித்தாந்தம்.

**உயிர் வகைகள்**

எண்ணற்ற உயிரினங்கள் உலகினிலே உள்ளன. அவற்றை நால்வகைத் தோற்றமுடைய, ஏழு வகைப் பிறப்புடைய எண்பத்து நான்கு நூறாயிரம் உயிர் வகைகள் என்பது சித்தாந்தக் கொள்கை. வித்திலிருந்து பிறந்து மேல் நோக்கி வளர்வனவற்றை உற்பீசம் என்பர். முட்டையில் தோன்றுவனவற்றை அண்டசம் என்பர். கருப்பையில் தோன்றுவனவற்றை சராயுசம் என்று குறிப்பிடுவர். வியர்வை முதலிய அழுக்குகளிலிருந்து தோன்றும் உயிர்கள் சுவேதசம் எனப்படும். இவை நான்கும் நால்வகைத் தோற்றங்கள்.

எழுவகைப் பிறப்புக்கள் என்பன ஊர்வன, நீர் வாழ்வன, விலங்கினம், மானிடம். தாவர வகை, பறவை வகை, தேவர்கள் என்பனவாகும் இத்தொகையையும் வகையையும் சற்று மாறுபடக் கூறும் மரபும் உண்டு. ஆயினும் பிறப்பு வேறுபாடுகள் எண்பத்து நான்கு நூறாயிரம் என்றே கொள்ளப்பெறும். இவ்வாறு தோன்றி வாழும் உயிர்க்குலம் எண்ணிறந்தன என்பது சைவக் கொள்கை.

மானுடப்பிறவி பெறுதற்கு அரியது. அதனாலேயே அப்பரடிகள் ''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்'' என்று அருளிச் செய்தார். ஏனெனில் இப்பிறவியில் தான் இறைவனைத் தலையால் வணங்கி நாவால் புகழ்ந்து போற்றி நெஞ்சால் நினைந்து கையாரக் கும்பிட்டு அவன் திருவருளால் உய்வு பெறமுடியும்.

**மூவகை ஆருயிர்**

உயிர் வருக்கத்தை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிப்பர். அவை யாவன சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என்பன ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களாலும் பிணிக்கப்பட்டவர்

சகலர். பிரளயாகலர் என்பவர் ஆணவம், கன்மம் ஆகிய இரண்டு மலங்களால் கட்டப்பட்டவர். விஞ்ஞானகலர் என்பவர் ஆணவ மலம் மட்டிலுமே உடையவர்கள்.

### அவத்தைகள்

உயிர்கள் யாவும் நிலை வேறுபாடுகளுக்கு உட்பட்டன. நிலை வேறுபாடுகள் இரண்டாகக் கொள்ளப்பெறும். முதல் வகையினைக் காரண அவத்தை என்றும் இரண்டாவது வகையினைக் காரிய அவத்தை என்றும் கூறுவர். அவத்தை (அவஸ்தை) என்ற சொல்லுக்கு நிலை வேறுபாடு என்பதே பொருள்.

### காரண அவத்தை

உயிர் இறைவன் அருளால் பிறப்பு எடுப்பதற்கு முன்பு ஆணவ மல மறைப்பினுல் முற்றிலும் பிணிக்கப்பட்டு அறிவும் செயலும் அற்று இருக்கும் நிலை கேவல அவத்தை எனப்படும். உயிரை ஆணவ மலத்தின் பிணிப்பிலிருந்து விடுவிக்கும் நோக்கத்தோடு இறைவன் தன் பெருங்கருணையால் அதற்கு உடல் கருவி உலகு நுகர்ச்சிப் பொருள் ஆகியவற்றைக் கூட்டுவிக்கின்றுன் இது சகல அவத்தை என்று பெயர் பெறும். இந்நிலையிலிருந்து படிப்படியே அறிவு வளர்ச்சி பெற்றுத் திருவருளால் ஞானமுதிர்ச்சி பெற்ற உயிர் முற்றிலும் மலப் பிணிப்பிலிருந்து விடுபட்டுத் தூய்மை பெறுகிறது. இந்நிலை சுத்த அவத்தை எனப்படும். இம் மூன்றும் காரண அவத்தைகளாகும்.

### காரிய அவத்தை

உயிர் உலகில் வாழுங்காலத்து ஐந்து வகையான நிலை வேறு பாடுகளை அடையும். அவை விழிப்பு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படங்கல் என்பனவாகும். இவற்றை முறையே சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்று வழங்குவர். இவ் வைந்தும் காரிய அவத்தைகளாகும். உயிர் கருவிகளோடு மிகுந்தும் குறைந்தும் கூடியும் நீங்கியும் வருவதனுல் இந்த நிலை வேறுபாடுகள் உளவாகின்றன.

### நனவு

மேலே கூறப்பட்ட அவத்தை நிலைகளில் உயிரின் முப்பத்தைந்து கருவிகளும் தொழிற்படுவதே விழிப்பு நிலையாகும். மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் அறிவுப் பொறிகள் ஐந்தும், கை கால் வாய் எருவாய் கருவாய் என்னும் செயற்பொறிகள் ஐந்தும், ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை என்ற தன் மாத்திரைகள் ஐந்தும், பேச்சு நடத்தல் இடுதல் கழித்தல் இன்பநுகர்வு என்னும் விடயங்கள்

ஐந்தும், பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்னும் வளிகள் பத்தும், மனம் புத்தி அகங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும் புருடனும் ஆகிய இவை முப்பத்தைந்தும் விழிப்பு நிலையில் செயல் படுவனவாகும். இவை நிகழ்கின்ற இடம் நெற்றி.

**கனவு**

இதனையடுத்தநிலை கனவு நிலையாகும். இது நிகழுமிடம் கழுத்து. முன்பு கூறப்பட்ட முப்பத்தைந்து கருவிகளில் அறிவுப்பொறிகள் ஐந்தும் செயற்பொறிகள் ஐந்தும் ஆகப் பத்துக்கருவிகள் நீங்கிவிட, மற்றைய இருபத்தைந்தும் இந்நிலையில் செயற்படும் கருவிகளாகும்.

**உறக்கம்**

அதனையடுத்த நிலை உறக்கம் ஆகும். அது நிகழுமிடம் இதயம் என்பர். இதற்கு முந்திய பத்தியில் குறிப்பிடப்பட்ட இருபத்தைந்து கருவிகளில் அந்தக்கரணங்களில் ஒன்றாகிய சித்தம் ஒன்றும் பத்து வளிகளில் உயிர் வளி ஒன்றும் புருடனுமாகிய மூன்று கருவிகளே தொழிற்படும் நிலை உறக்க நிலையாகும். அதாவது கனவு நிலையில் தொழிற்பட்ட கருவிகளில் இருபத்திரண்டு நீங்கிவிட, மூன்று மட்டிலுமே இப்போது செயல்படுகின்றன.

**பேருறக்கம்**

இதனையடுத்தது பேருறக்கம் என்னும் நிலையாகும். இது நிகழு மிடம் கொப்பூழ் ஆகும். இந்நிலையில் உயிர் வளியும் புருடனுமாகிய இரண்டே கருவிகள் தொழிற்படுகின்றன.

**உயிர்ப்படங்கல்**

ஐந்தாவது நிலை உயிர்ப்படங்கல் என்பதாகும். இதிலே புருடன் ஒன்று மட்டிலுமே செயல்படும் இது நிகழுமிடம் மூலாதாரம் என்பர்.

இவ்வாறு அவத்தை வேறுபாடுகளுக்கு உட்படுவதும் கருவி கரணங்களோடு பொருந்தியும் நீங்கியும் வருவதும் உயிரின் பொது வியல்பாகும். உயிர் ஒருகாலும் தனித்து நில்லாது. ஏதேனும் ஒன்றினைப் பற்றியே நிற்கும். அதாவது முப்பொருள்களில் ஒன்றாகிய உயிர் தானே தனித்து நில்லாது இறைவனைப் பற்றிக் கொண்டோ அல்லது தளையைப் பற்றிக் கொண்டோ நிற்கும். தளையைப் பற்றிக் கொண்டிருக்கும் நிலை உயிரின் பொதுவியல்பாகும்.

இக்கருத்துகள் அனைத்தும் சுருக்கமாக ஆசிரியர் அருள்நந்தி சிவத்தால் பின்வரும் பாடலில் விளக்கப்பட்டுள்ளன.

**''உயிர் எனப்படுவது இந்த உடலின் வேறு உளதாய் உற்றுச்**
**செயிர்உறும் இச்சா ஞானச் செய்திகள் உடையது ஆகிப்**
**பயில்வுறும் இன்பத் துன்பப் பலன்களும் நுகரும் பார்க்கில்**
**துயிலொடும் அஞ்சு அவத்தைப் படும் உண்மை துரியாதீதம்''**
*(சித்தியார் சுபக்கம் 187)*

தோற்றமில் காலந்தொட்டே ஆன்மா ஆணவ மலத்தோடு தொடக்குண்டு கிடப்பதால் அது பாசக்கட்டுக்கு உட்பட்டதாகிறது. தளைப்பட்டு நிற்கும் தன்மையுடையதனுல் உயிரைப் பசு என்று அழைப்பர். ஆணவ மலத் தொடர்பினுல் உயிரின் வியாபகத் தன்மை நீங்கி அணுத்தன்மை தோன்றுகிறது. இவ்வாறு கேவல நிலையில் அழுந்திக் கிடந்த உயிர் மலப் பிணிப்பிலிருந்து விடுபட்டுத் தன் உண்மை நிலையை அடைவதற்குரிய வழி தெரியாமல் செயலற்றுக் கிடப்பதுவே கேவல அவத்தை என்பது முன்பே கூறப்பட்டது.

இறைவன் தன் பெருங்கருணையினுல் உயிர்களை ஆணவ மல மறைப்பிலிருந்து விடுவிப்பதற்காக அவற்றுக்கு உடல்களை வழங்குகிறுன். அவ்வுடல்கள் செயல்படுவதற்காகவும் அறிவு பெறுவதற்காகவும் கரணங்களை வழங்குகிறுன். உடம்பொடும் கரணங்களொடும் பொருந்திய உயிர் வாழ்வதற்கு ஏற்ற உலகைப் படைத்து அளிக்கிறுன். அவை வாழ்வதற்குரிய நுகர்ச்சிப் பொருள்களையும் படைத்து வழங்குகிறுன். இவை நான்கும் தநு, கரணம், புவனம், போகம் எனப்படும். உலகில் பிறந்த உயிர்கள் தத்தம் வினைக்கேற்ப இன்பத் துன்பங்களை நுகர்ந்து வரும். நுகரும் போது அவை தமது வினையின் பயனுக விளைந்தன என்று அறியாமல் மீண்டும் இரு வினைகளை இயற்றி வரும். அதன் விளைவாக மேலும் மேலும் பிறப்பு இறப்புகளுக்கு ஆளாகிக் காற்றுடி போலவும் கொள்ளி வட்டம் போலவும் பல பிறவிகள் எடுக்கும். இதனுல் உயிரைப் பற்றியிருந்த ஆணவ மலம் நெகிழும். உரிய பக்குவம் வந்த போது இறைவனே குருவாக வந்து அருள்புரிவான். அவன் அருளாலே உயிரின் அறிவில் உண்மை ஞானம் ஒளிர்ந்து தோன்றும். மலத்தின் கட்டுகள் முற்றிலும் நீங்கி உயிர் நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி இறைவன் திருவடி நிழலில் என்றும் மாரு இன்பத்தினைத் துய்த்திருக்கும்.

**உயிரியல்பு**

உயிர் அறிவுடைப்பொருள். ஆயினும் அதன் அறிவு சிற்றறிவு. எனவே அது சார்ந்ததன் வண்ணமாம் தன்மையை உடையது.

உலகியற் பொருள்களோடு பொருந்தும் போது அவற்றின் வண்ண மாகவும் இறைவனோடு பொருந்தும் போது திருவருள் வண்ண மாகவும் நிற்கும் இயல்புடையது. சார்ந்ததன் வண்ணமாம் தன்மையே உயிரின் உண்மை இயல்பாகும்.

அசத்தை அசத்தால் அறிந்து அசத்தின் கண் அழுந்தியும், சத்தை சத்தால் அறிந்து சத்தின் கண் அழுந்தியும் நிற்கும் இயல் புடைய உயிரை சதசத்து என்பர். ''இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா'' என்பது மெய்கண்ட தேவநாயனர் திருவாக்கு.

**இரண்டலா ஆன்மா**

என்றும் மாறுத்தன்மையனை இறைவனை சத்து என்ற பெயரால் வழங்குவது மரபு. சத்து என்பது தமிழில் செம்பொருள் என்ற சொல்லால் குறிக்கப்படும் என்பர் அறிஞர். குறைவிலா நிறை வுடைய இறைவனுக்கு அசத்துப் பொருள்களாகிய உலகியல் பொருள் களால் வருவதொரு பயன் இல்லை. எனவே அவன் அவற்றை அறிந்து அனுபவியான். உலகியல் பொருள்களோ அறிவற்றன. ஆதலால் அவையும் செம்பொருளை அறிந்து பயன் பெற மாட்டா. எனவே சத்தும் அல்லாமல் அசத்தும் அல்லாமல் அவ்விரண்டினுக்கும் இடைப் பட்டதாகிய சதசத்து எனப்படும் உயிரே இரண்டினையும் அறிவதாயும் இரண்டின் பாலும் சார்வதாயும் உள்ளது என்பது சைவசித்தாந்தக் கருத்து.

# இயல் நான்கு

## தளை

சைவ சித்தாந்தம் கூறும் தளைக் கொள்கை தனித்தன்மை வாய்ந்தது. ஏனெனில் அது ஒன்றே ஆணவம் என்ற குற்றம், தோற்றமில் காலந்தொட்டே உயிர்களைப் பற்றி இருக்கிறது என்ற கொள்கை உடையது. இது பிற சமயத்தாரால் ஏற்றுக்கொள்ளப் படாத கருத்தாகும்.

உலகம் ஏன் படைக்கப்பட்டது ? உலகத்தைப் படைத்தவன் கருணையே வடிவானவனுன இறைவன் எனில் அவன் துன்பத்தை எதற்காகப் படைத்தான் ? கொடிய விலங்குகளையும் பாம்பு தேள் முதலிய நச்சுத் தன்மை கொண்ட உயிர் வகைகளை எதற்காகப் படைத்தான் ? புயலையும் பூகம்பத்தையும் இடியையும் மின்னலையும் ஏன் படைத்தான் ? மனித உடலுக்கு ஊறு செய்யும் கண்ணுக்குத் தெரியாத நோய்க் கிருமிகளை அவன் ஏன் படைக்கவேண்டும் ?

இறைவன் கருணையே வடிவானவன் என்பது மட்டுமன்றி அவன் எல்லா வல்லமையையும் உடையவனுன்றே ? துயரத்தையும் நோயையும் மூப்பையும் சாவையும் அவன் நினைத்தால் உலகிலேயே இல்லாதபடி அகற்றி இருக்க முடியாதா? என்றெல்லாம் கேள்விகள் எழும். இக்கேள்விகள் அனைத்திற்கும் சைவ சித்தாந்தம் கூறும் விடையானது அதன் பாசக் கொள்கையில் வேர் கொண்டுள்ளது.

உலகில் உள்ள எல்லாச்சமயங்களும் உலகத்தின் துயரங்களுக்கு விடை தேட முனைந்திருக்கின்றன. ஒவ்வொன்றும் கண்ட விடை வெவ்வேருக அமைந்துள்ளது. துன்பத்துக்கான காரணம் பற்றி ஆராயும் ஆராய்ச்சியை ஆங்கிலத்தில் THEODICY என்று வழங்குவர் இதனை இறைவனின் நீதி என்று மொழி பெயர்க்கலாம்.

ஒரு நாணயத்தின் இருபக்கங்களைப் போல் உலகில் இன்பமும் துன்பமும் கடவுளால் படைக்கப்பட்டன என்பது சில மதங்களின் கொள்கை. இன்னும் சிலர், நிழல் அருமை வெய்யிலிலே தெரியும் என்பது போல இறைவன் படைத்தளித்த இன்பங்களின் உயர்வு, துன்பம் நேரிடும் பொழுதே உயிர்களால் நன்கு அறியப்படும். அதற்காகவே கடவுள் துன்பத்தைப் படைத்தார் என்பர் வேறு சில சமயங்கள் மனிதன் செய்த தவறுகளின் விளைவாகத் துன்பங்கள் தோன்றினவே யல்லாமல் கடவுள் அவற்றைப் படைக்கவில்லை எனக் கூறும். மற்றும் சில சமயங்கள் இன்பத்தைப் படைத்தவன் கடவுள். துன்பத்தைப் படைத்தவன் கடவுளின் பகைவனுன சாத்தான் என்று விடை கூறும். இந்த விடையில் மேலும் ஒரு தடை எழும். அந்த

சாத்தானைப் படைத்தவனும் கடவுள் தானே? என்பதே அத்தடையாகும் இவ்வாறு கேள்விகள் வரம்பின்றி எழுந்து கொண்டே இருக்கும்.

இந்திய தத்துவக் கொள்கைகளில் உயிரின் குறைபாட்டால் மனிதனுக்குத் துன்பம் தோன்றுகிறது என்று பொதுவாகக் கொள்ளப் படுகிறது. உயிரின் குறைபாடு எது என்ற வினவிற்கு விடைகள் பல வாருகக் கூறப்படுகின்றன. உயிர் சிற்றறிவுடையது ஆதலால் அது ஒன்றினை மற்றொன்ருக மயங்கி அறிந்து தனக்குத்தானே துன்பத்தைத் தேடிக்கொள்ளுகிறது என்று ஒரு சாரார் கூறுவர். மயங்கி அறியும அறிவு பிராந்திஞானம் எனப்படும்.

மற்றொரு சாரார் உயிருக்கு அறிவு நிகழாத போது அது துன்பத்தில் வீழ்கிறது என்பர். இவர்களின் கொள்கைப்படி ஞானத்தின் இன்மையே உயிருக்குக் குற்றமாகும் என்பர். வேறும் சிலர் உயிர் முக்குணவயப்படுவது. முக்குணங்களில் ஒன்ருகிய தாமத குணத்தின் மிகுதியே உயிரின் அறிவைத் தடுத்து நிற்கும் என்று கூறுவர். மற்றும் சிலர் மூலப்பகுதியிலிருந்து தோன்றிய அவிச்சை என்ற அறியாமையே உயிருக்குக் குற்றமாகும் என்பர். பின்னும் சிலர் மாயையும் கன்மமுமே உயிர் அறிவை மறைக்கும் என்பர். இறைவனின் சிவ சத்தியே உயிரின் அறிவைத் தடுத்து நிற்கும் என்று சிலர் கொள்ளுவர். வேறு சிலரோ ஆன்மாவின் குணமே அதன் அறிவைத் தடுக்கும் மலமாகும் என்பர்.

**ஆணவ மலம்**

மேற்கூறிய கொள்கைகள் யாவற்றையும் மறுத்து, சைவ சித்தாந்தம் ஆணவ மலமே உயிரின் அறிவைத் தடுத்து அதற்குத் துன்பத்தை தருகிறது என்று அறிவார்ந்த முறையிலே நிறுவிக் காட்டுகிறது. இக்கருத்தை ஆசிரியர் உமாபதிசிவம் திருவருட்பயன் இருபத்து ஏழாவது பாடலில், ''இருள் இன்றேல் துன்பு என்'' என்று மிகச் சுருக்கமாக அருளியுள்ளார். இங்கு இருள் என்ற சொல் ஆணவ மலத்தைக் குறிக்கிறது.

**ஆணவத்தின் இயல்பு**

ஆணவ மலம் ஒருவராலும் படைக்கப் படாமல், தோற்றமில் காலந்தொட்டே உள்ளது. எனவே அது நித்தம் என்று கூறப்படும். அது ஒன்றேயன்றிப் பலவல்ல. ஆயினும் அதனுடைய ஆற்றல்கள் பலவாகும். ஏனெனில் ஒன்றேயாகிய ஆணவ மலம் எல்லா உயிர்களையும் பிணித்துள்ளதால் அதன் ஆற்றல் அளவிடற்கரியது, அநேக சத்தியுடையது என்பர். அது உயிரின் உடனுகத் தோற்றமில் காலந் தொட்டே இருந்து வருவது. எனினும் அது உயிரின் குணமன்று.

உயிரில் பற்றியுள்ள குற்றமேயாகும். ஆணவம் உயிரின் குணம் என்றால் வீடுபேற்று நிலையில் உயிர் ஆணவத்திலிருந்து பிரிந்து நிற்கும் என்று கொள்ளமுடியாது. ஏனெனில் ஒரு பொருளின் குணம் நீங்குமானல் குணியாகிய பொருளும் கெடும்.

ஆணவ மலம் உயிரின் அறிவையும் தொழிலையும் கேவல நிலையில் முற்றிலும் மறைத்து நிற்கும். சகல நிலையில் உயிரின் அறிவும் தொழிலும் விழுமிய பொருள்களிற் செல்லாமல் அவற்றைக் கீழ் நோக்கியே செலுத்தும். முற்றிலும் அறிவை மறைப்பதாகிய ஆணவத்தின் ஆற்றல் ஆவாரக சத்தி எனப்படும். இதுவே ஆணவ மலத்தின் தன் இயல்பு. ஆணவத்தின் பொதுவியல்பு என்பது உயிரறிவைக் கீழ் நோக்கிச் செலுத்துவதாகிய ஆற்றலாகும். அது அதோநியாமிகா சத்தி எனப்படும். ஆணவம் உயிரோடு சேர்ந்திருப்பதற்கு உவமையாக 'செம்பினில் களிம்பு போல' என்று கூறுவர்.

> ''ஒன்றதாய் அநேக சத்தி உடையதாய் உடனாய் ஆதி
> அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு தொழிலை ஆர்த்து
> நின்று போத்திருத்து வத்தை நிகழ்த்திச் செம்பினில் களிம்பு ஏய்ந்து
> என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே''

என்பது சிவஞான சித்தியார். (சுபக்கம் 170)

ஆணவ மலத்துக்கு சகச மலம் என்றும் ஒரு பெயர் உண்டு. ஏனெனில் உயிர் என்று உண்டோ அன்றே ஆணவ மலமும் உண்டு. சகசம் என்ற சொல் உடன் தோன்றியது என்று பொருள் தரும். ஆணவத்தை மூல மலம் என்றும் வழங்குவர். ஏனெனில் ஆணவ மல நீக்கத்தின் பொருட்டே மாயா மலமும் கன்ம மலமும் உயிர்களிடத்து வந்து பொருந்தின.

காரிட்ட ஆணவக் கருவறையில் ஒரு கண்ணிலாக்குழவி போலக் கிடந்த உயிர்க்கு ஆணவ மலத்திலிருந்து விடுதலை கொடுப்பதற்காகவே இறைவன் மாயையையும் கன்மத்தையும் உயிர்களுக்குப் பொருத்துகிறான். ஒரு குற்றத்தை நீங்குவதற்காக மேலும் இரண்டு குற்றங்களைக் கூட்டுவானேன் என்று ஒரு கேள்வி எழும். சில துணிகளைச் சேர்த்து அடுக்கி ஒரு நூலால் கட்டி முடிச்சுப் போட்டு வைத்திருப்பதாகக் கொள்ளுவோம். அந்தக் கட்டுத் தளர வேண்டுமானால் அதனை விட இறுக்கமான கட்டுகள் போடுதல் வேண்டும். முதற்கட்டு தானாகவே நெகிழ்ந்து கழன்று போகும். இது போலவே மூலமலக்கட்டின் நெகிழ்ச்சியும், மாயை கன்மங்களை இறைவன் உயிருக்கு ஊட்டுவதனால் நிகழும்.

இதற்கு இன்னொரு உவமையும் கூறப்படும். ஆணவம் கண்ணை மறைக்கும் படலத்தைப் போல உயிரைக் குருடாக்குகிறது. அக் குருடனுக்கு ஓரளவு துணை செய்யும் ஊன்று கோல் போல இறைவன் மாயையை உயிரோடு கூட்டுகிறான். அதன் பிறகு உயிரின் அறிவைப் படிமுறையிலே வளர்த்து அதற்கு வீடு பேறு தருகிறான். இவ்வுவமை போற்றிப் பஃறொடையில் உமாபதி சிவனாரால் தரப்பட்டுள்ளது

> **"... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ஞானத்தின்**
> **கண்ணை மறைத்த கடியதொழில் ஆணவத்தால்**
> **எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும் — உள்நாடிக்**
> **கட்புலனால் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோல்**
> **பொற்புடைய மாயைப் புணர்ப்பின் கண் — முற்பால்**
> **தனுகரணமும் புவனமும் தந்து அவற்றால்**
> **மனம்முதலா வந்த விகாரத்தால் — வினை இரண்டும்**
> **காட்டி அதனால் பிறப்பு ஆக்கிக் கைக்கொண்டு**
> **மீட்டுஅறிவு காட்டும் வினை போற்றி"**
>
> (போற்றிப் பஃறொடை-கண்ணிகள் 10 - 13)

ஆணவ மலத்தைப் பல்வேறு பெயரிட்டு வழங்குவர். உயிரினது அறிவையும் செயலையும் முற்றிலும் மறைப்பதாலும் அதன் நிறைவை அகற்றி அணுத்தன்மைப் படுத்துவதாலும் ஆணவமே உயிருக்கு நேர் எதிர்ப் பகை. இதனைப் பிரதிபந்தம் என்பர். கன்மம் என்பது ஆணவத்தினால் விளைந்த யான் எனது என்னும் செருக்கினால் உயிரை வந்து பற்றுவது. இது ஆன்மாவின் அறிவை வீடுபேற்றை நோக்கிச் செல்லவிடாமல் நுகர்வுகளை நோக்கிச் செலுத்தும். ஆணவ மலத்தின் வழியாக வருவது இது. ஆதலால் இதனை அனுபந்தம் என்பர். மாயை என்னும் மலம் ஆன்மாவின் முற்றறிவைத் தடுத்து மயக்கத்தையும் தருவது. இது கன்மத்தோடு தொடர்புடையது. ஆதலால் இதனைச் சம்பந்தம் என்பர்.

**ஆணவ மலத்தின் காரியங்கள்**

ஆணவ மலம் ஒன்றே ஆயினும் காரிய வேறுபாட்டால் ஏழு வகைப்படும் அவையாவன மோகம் மதம் அராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் என்பனவாகும் இவற்றுள் மோகம் என்பதே மற்றைய ஆறு காரியங்களையும் தோற்றுவிப்பது. மோகம் இல்லாத போது மற்றைய ஆறும் நிகழா. இவற்றின் விரிவு மாதவச் சிவஞான முனிவரால் சிவஞான மாபாடியத்தில் இரண்டாம் நூற்பாவில் இரண்டாம் அதிகரணத்துக்குரிய பேருரையில் விளக்கிக் கூறப் பட்டுள்ளது.

### மாயை

சைவ சித்தாந்தக் கோட்பாட்டின்படி மாயை என்பது உயிரின் அறிவைத் தடுத்து நிற்பது அன்று. ஆணவமே உயிரறிவைத் தடுத்து நிற்பதாகும். மாயையோ உயிரின் அறிவை ஓரளவுக்கு விளக்குவது ஆகும் எனவே இதற்கும் ஆணவத்துக்கும் உரிய வேறுபாடு பெரிதாகும். ''விளையாததொர் பரிசில் வரு பசு பாச வேதனை ஒண் தளையாயின தவிரவ்வருள் தலைவன்'' எனத் தொடங்குத் தேவாரத்தில் திருஞானசம்பந்தர் மாயையை 'ஒண் தளை' என்று குறிப்பிட்டருளுகிறார். ஆதலால் மாயை ஒளி உடையது என்று தெளியப்படும். ஆணவமாகிய இருளுக்குள் தடுமாறும் உயிருக்கு விடியும் வரை விளக்கைப் போல் உதவுவது மாயை என்று (திருவருட்பயன் 30) ஆசிரியர் உமாபதிசிவம் அறிவுறுத்துகிறார்.

மாயை உள்பொருளும் அன்று; இல் பொருளும் அன்று. இன்னது எனச் சொல்ல முடியாத தன்மையை உடையது என்று மாயாவாதிகள் கூறுவர். சைவ சித்தாந்தம் அவர்கள் கொள்கையை முற்றிலும் மறுத்து அதன் இயல்பைப் பின்வருமாறு விளக்கும்.

### மாயையின் இயல்பு

மாயை என்பது என்றும் உள்ள பொருள். அது மிக நுண்ணியது. ஆகையினாலே அதற்கு உருவம் இல்லை. எனவே அது அருவமானது. மாயை என்பது ஒரே பொருள் அது காரியப்படும் போது பலவகைப் பொருள்களாக வடிவம் கொள்ளும் இயல்புடையது. உலகத்துப் பொருள்கள் யாவும் தோன்றுவதற்கு மாயையே வித்தாக விளங்குகிறது மாயை அறிவுடைப் பொருள் அன்று; சடப் பொருளே ஆகும். அது எங்கும் நிறைந்திருக்கும் இயல்பினை உடையது. இயல்பாகவே பாசங்களில் இருந்து நீங்கிய இறைவனுக்கு மாயை வைப்பாற்றலாக விளங்குவது உயிருக்கு உடம்பாகவும், கருவிகளாகவும், வாழும் உலகமாகவும், நுகர்ச்சிப் பொருள்களாகவும் மாயையே அமைகின்றது. ஆணவ மலத் தொடர்பால் கட்டுண்ட உயிருக்கு யான் எனது என்னும் செருக்குடன் செயல்படும் தன்மை உள்ளதனால் மாயை மயக்கத்தையும் செய்யும்.

இக் கருத்துக்களை எல்லாம் உள்ளடக்கி அருள் நந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியார் 143ம் பாடலில்,

> **''நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகத்திற்கு ஓர்**
> **வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கு ஓர்**
> **சத்தியாய் புவன போகம் தனு கரணமும் உயிர்க்காய்**
> **வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே''**

என்று தொகுத்துக் கூறியுள்ளார். இப்பாடலில் 'மயக்கமும்' என்ற சொல்லில் உள்ள உம்மை மாயையின் பொதுவியல்பைச் சுட்டுவ தாகக் கொள்ளுதல் வேண்டும்.

**மாயையின் வகைகள்**

மாயை ஒன்றே ஆயினும் அதனைத் தூயமாயை (சுத்தமாயை), தூவாமாயை (அசுத்தமாயை) என்று இரண்டாகக் கொள்ளுவர். இவை இரண்டினோடும் பிரகிருதிமாயை என்பதையும் கூட்டி மூன்றாகச் சொல்லும மரபும் உண்டு. இவ்வாறு கூறுவதனால் இம்மூன்று மாயை களும் தனித்தனியானவை என்று கொள்ளப்படா. உயிர்கள் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்று மூன்று வகையாகப் பிரித்துக் கூறப்படுவதற்கு ஏற்ப அவரவர்க்கு உரிய உலகமும் ஒரே முதற் காரணத்திலிருந்து தோன்ற இயலாது என்பதால் இவ்வாறு கொள்ளப்படுகிறது. மலத்தோடும் கன்மத்தோடும் விரவாத மாயை யின் பகுதி தூயமாயை எனப்படும். அவ்விரண்டினோடும் விரவிய மாயையின் பகுதிகள் மற்றைய இரண்டுமாகும்.

மாயை இறைவனின் பரிக்கிரக சத்தி எனப்பெறும். பரிக்கிரகம் என்பது எப்போதும் உடன் இருப்பதாயினும், வேண்டும்போது மட்டும் இறைவனால் பயன் படுத்தப்படுகிற ஆற்றல் ஆகும். வங்கியில் முதலீடு செய்திருக்கின்ற பணம் நம்முடையதே ஆயினும் தேவைப் படும் போது மட்டிலும் அதில் ஒரு பகுதியை எடுத்துப் பயன் படுத்துவது போன்றது வைப்புச் சத்தி என்னும் பரிக்கிரக சத்தி. மாயைக்குத் தாரகமாவது அதாவது மாயையைத் தாங்குவது இறை வனின் திருவடியே ஆகும். இதனை சிவஞான போதத்தின் முதல் நூற்பாவின் இரண்டாம் அதிகரணத்தில் மூன்றுவது எடுத்துக் காட்டு வெண்பாவில் ''தாரகமாம் அத்தன் தாள் நிற்றல்'' என்ற சொற்றொடரால் மெய்கண்ட தேவநாயனார் அருளிச்செய்கிறார்.

தூயமாயை விந்து, குண்டலினி, மாமாயை குடிலை என்றும் பெயர் பெறும்.

தூவாமாயை மோகினி, மாயை என்றும் வழங்கப்பெறும். இதனை அதோ மாயை என்றும் வழங்குவர்.

பிருகிருதி மாயை எனப்படுவது மான் என்றும் அவ்வியத்தம் என்றும் பெயர் பெறும். அவ்வியத்தம் என்பது வெளிப்பட்டுத் தோன்றாதது என்ற பொருளைத் தரும்.

தூய மாயையிலிருந்து சொல்லுலகும், பொருள் உலகுமாகிய இருவகை உலகங்களும் காரியப்பட்டுத் தோன்றும் சொல்லுலகம் சத்தப் பிரபஞ்சம் என்றும் பொருள் உலகம் அர்த்தப் பிரபஞ்சம்

எனவும் வழங்கப்பெறும். சொல் உலகுக்கு அடிப்படையானவை நால்வகை வாக்குகள் என்பர். அவை சூக்குமம் பைசந்தி மத்திமை வைகரி என்பனவாகும். சுத்த மாயையின் காரியப்பாடுகள் பரிணமம் அன்று. பரிணமம் என்பது பால் தயிராவது போன்ற மாற்றம். அத்தகைய மாற்றம் இங்கு நிகழவில்லை. இங்கு நிகழ்கிற மாற்றத்திற்கு விருத்தி என்று பெயர். துணி கூடாரம் ஆவது போன்ற மாற்றமே விருத்தி எனப் பெயர் பெறும். விழாக்காலங்களில், மடித்து வைக்கப்பட்டிருக்கின்ற துணியை விரித்து மேற்கட்டி (சாமியானு) அமைப்பதை இதற்கு ஒப்புமையாகக் கூறலாம்.

### சிவதத்துவங்கள்

தூயமாயை பொருள் உலகாகக் காரியப்படும் போது அதிலிருந்து கலைகளும் தத்துவங்களும் தோன்றுகின்றன. சாந்தியதீத கலை சாந்தி கலை வித்தியா கலை பிரதிட்டா கலை நிவிர்த்தி கலை ஆகிய இவ்வைந்தும் பஞ்ச கலைகள் எனப்படுவன. தூயமாயையில் தோன்றுகிற தத்துவங்களும் ஐந்தாகக் கூறப்பெறும். அவை சிவம், சத்தி, சதாசிவம், மகேசுவரம், சுத்தவித்தை என்பனவாகும். இவற்றைச் சிவபெருமானே தொழிற்படுத்துவதால் இவை சிவ தத்துவம் எனப் பெயர் பெறும். இத்தத்துவங்கள் ஐந்தும் உயிரின் அறிவு விழைவு ஆற்றல்களை மலப் பிணிப்பிலிருந்து நீக்கும் பொருட்டு ஏனைய முப்பத்தொரு தத்துவங்களையும் செலுத்துவன ஆதலால் இவற்றைப் பிரேரக காண்டம் (செலுத்தும் தொகுதி) என்பர்.

முற்றிலும் ஞானமே ஆகிய நிலையைச் சிவம் என்பர். முற்றிலும் ஆற்றலே வடிவானது சத்தி. ஞானமும் செயலும் ஒத்த நிலை சதாசிவம். செயலாற்றல் மிகுந்து ஞானம குறைந்தால் மகேசுவரம். ஞானம் மிகுந்து கிரியை குறைந்த நிலையில் சுத்தவித்தை என்பர். இவை ஐந்தும் கால தத்துவத்தைக் கடந்தவை. ஆகையால் இவற்றுள் முந்தியவை பிந்தியவை என்று எதுவும் இல்லை. ஞானம் கிரியை என்பவற்றின் தொழிற்பாடு பற்றியே இவை வரிசைப் படுத்தப்பட்டுள்ளன.

### வித்தியா தத்துவங்கள்

இவற்றை அடுத்துத் தோன்றுவன வித்தியா தத்துவங்களாகும் சிவதத்துவம் மாயையினைச் செலுத்தும். சத்தி தத்துவம் காலம் நியதி கலை என்ற மூன்று தத்துவங்களையும் செலுத்தும். சதாசிவம் புருடனைச் செலுத்தும். மகேசுவரம் அராகத்தைச் செலுத்தும். சுத்த வித்தை வித்தியா தத்துவத்தைச் செலுத்தும். மாயை காலம் நியதி கலை புருடன் அராகம் வித்தை என்ற இந்த ஏழும் வித்தியா தத்துவங்கள் எனப்படும்.

காலம் நியதி கலை வித்தை அராகம் ஆகிய ஐந்தும் ஆன்மாவுக்குச் சட்டை போல அமைந்துள்ளன ஆகையால் இவை பஞ்ச கஞ்சுகம் எனப்படும். இவற்ரோடு பொருந்தி ஆன்மாவின் அறிவு ஆற்றல் விழைவு என்பன விளக்கம் பெறும் பொழுது ஆன்மா நுகர்வோனுகும் தன்மையைப் பெறுகிறது. நுகர்வோனுகும் தன்மையைப் பெற்ற உயிரே புருடன் என்று பெயர் பெறும். இவ் ஏழு தத்துவங்களின் தொகுதி போசயித்திருகாண்டம் எனப்பெயர் பெறும்.

## ஆன்ம தத்துவம்

இதனை அடுத்து வருவன ஆன்மதத்துவம் என்ற பெயரால் வழங்கப்பெறும் இருபத்து நான்கு தத்துவங்களாகும். கலையிலிருந்து மூலப்பகுதி தோன்றும். இதனை மான் என்றும் பிரகிருதி என்றும் வழங்குவர். சத்துவம் இராசதம் தாமதம் என்ற முக்குணங்களும் பிரிந்து விளக்கமுறத் தோன்ருத நிலையில் உள்ளதே மூலப்பகுதி. ஆகையால் அது அவ்வியத்தம் என்றும் பெயர் பெறும்.

மூலப்பகுதியிலிருந்து குணதத்துவமும் அதிலிருந்து புத்தியும் புத்தியிலிருந்து அகங்காரமும் தோன்றும். அகங்காரத்தை தைசத அகங்காரம் வைகாரிக அகங்காரம் பூதாதி அகங்காரம் என மூன்று வகையாக கொள்ளுவர்.

தைசத அகங்காரத்திலிருந்து மனமும் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்து அறிவுப் பொறிகளும் தோன்றும்.

வைகாரிக அகங்காரத்திலிருந்து வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் (மொழி, கால், கை, எருவாய், கருவாய்) என்ற தொழிற் கருவிகள் தோன்றும்.

பூதாதி அகங்காரத்தினின்று ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் தன் மாத்திரைகள் ஐந்தும் தோன்றும். அவற்றிலிருந்து விண், வளி, அனல், புனல், மண் என்னும் ஐம்பெரும் பூதங்களும் தோன்றும். மூலப் பகுதியிலிருந்து தோன்றுவன சித்தம் புத்தி மனம் அகங்காரம் எனும் அந்தக்கரணங்கள் நான்கு என்பர். ஆக இவை இருபத்துநான்கும் ஆன்ம தத்துவங்கள் ஆகும். இவை ஆன்மாவால் நுகரப்படுவன ஆகையால் இத்தொகுதி போக்கிய காண்டம் என்று பெயர் பெறும்.

இவ்வாருக சிவ தத்துவங்கள் ஐந்தும் வித்தியா தத்துவங்கள் ஏழும் ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கும் என சைவ சித்தாந்தம் முப்பத்தாறு தத்துவங்கள் உள்ளன என்று கொள்ளுகிறது மற்றைச் சமயங்களில் இருபத்தைந்து தத்துவங்கள் வரையிலுமே கொள்ளப் படுகின்றன என்பது சிந்தித்து உணரத்தக்கது.

**வினைக் கொள்கை**

மேலைநாட்டுத் தத்துவ வாதிகள் வினைக் கொள்கைக்குச் சிறப்பிடம் தருகின்ற கீழை நாட்டவரை 'விதியை நம்புபவர்கள்' என்று எள்ளலாகக் குறிப்பிடுவார்கள். இந்தியத் தத்துவக் கொள்கைகளும் வினை பற்றிய கருத்துக்களில் தமக்குள் மாறுபடுகின்றன. சைவ சித்தாந்தத்தின் வினைக் கொள்கை தனித்தன்மை உடையது. அறிவு பூர்வமானது.

சைவ சித்தாந்தம் விதி என்ற சொல்லை விட வினை என்ற சொல்லைப் பயன்படுத்துவதையே பெருவழக்காகக் கொண்டுள்ளது. ஏனெனில் நாட்டு மக்களில் பெரும்பாலோர் நம்புவது போலத் தலையெழுத்து, தலைவிதி என்பன மனிதரை மீறிய சக்தி என்று சைவ சித்தாந்தம் கொள்வதில்லை. ஓர் உயிர் செய்த நல் வினையோ தீவினையோ உரிய காலத்தில் அவ்வுயிருக்கு இறைவனால் இன்பமாகவோ துன்பமாகவோ ஊட்டப்படுகிறது என்பதையே சித்தாந்தம் வலியுறுத்துகிறது. இரு வினைகளை இயற்றுபவன் மனிதன். இரு வினைப் பயனை ஊட்டுபவன் இறைவன். எனவே வினைக்குப் பொறுப்பு ஏற்க வேண்டியவன் மனிதனே அல்லாமல் இறைவனல்லன்

சேக்கிழார் பெருமான் பெரியபுராணத்தில் சாக்கிய நாயனார் வரலாற்றில் சைவ சித்தாந்தத்தின் வினைக் கொள்கையை மிகச் சுருக்கமாகக் கூறுகிறார்.

> **''செய்வினையும் செய்வானும் அதன் பயனும் கொடுப்பானும்**
> **மெய் வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக்கொண்டே**
> **இவ்வியல்பு சைவ நெறி அல்லவற்றுக் கில்லை என**
> **உய்வகையால் பொருள் சிவன் என்று அருளாலே உணர்ந்தறிந் [தார்''**

இப்பாடலால் வினை என ஒன்று உளது என்பதும் அவ் வினையைச் செய்பவன் உயிரே என்பதும் வினையின் விளைவாகிய பயன் உண்டு என்பதும் அப்பயனை உயிர்களுக்குக் கொடுப்பவன் இறைவனே என்பதும் தெளிவாக விளக்கப்பட்டது. அதுவுமல்லாமல் இக் கொள்கை, சைவ நெறியல்லாத பிற நெறிகளில் இல்லை என்பதும் வலியுறுத்தப்பட்டது. இதன் நுட்பம் ஆழ்ந்து சிந்தித்தற்குரியது.

இந்தப் பிறவியில் விளைகின்ற இன்ப துன்பங்களுக்குக் காரணம் முந்திய பிறவியில் செய்த நன்மை தீமைகளே. முந்திய பிறவியில் வாய்த்த இன்ப துன்பங்களுக்குக் காரணமானவை அதற்கு முந்திய பிறவியில் செய்த வினைகளே இவ்வாறு வரம்பின்றி ஓடுவதைத் தவிர்த்துக் கன்ம பலமும் அநாதியே உள்ளது என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது. இதை மூல கன்மம் எனவும் காரண கன்மம் எனவும் பெயரிட்டு வழங்குவர். இக்காரண கன்மத்திலிருந்து

தோன்றுவனவே நல்வினை தீவினை என்னும் இருவினைகளுமாகும். எனவே இவற்றைக் காரிய கன்மம் என்று வழங்குவர்.

நல்வினையாயினும் தீவினையாயினும் இரண்டுமே உயிருக்குப் பூட்டப்பட்ட விலங்குகளே என்பது சைவ சித்தாந்தம் கொள்கின்ற கருத்து ஏனெனில் இரு வினைகளும் உயிர்களை வீடு பேறு அடைவதிலிருந்து தடுத்து மீண்டும் பிறவியில் செலுத்துகின்றன. நல்வினை பொன் விலங்கானால் தீவினை இரும்பாலாகிய விலங்காகும். இக் கருத்தே திருவள்ளுவராலும்

**''இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''** (குறள் 5)

என்று சுட்டப்படுகிறது.

**மூவகை வினைகள்**

வினைகளை மூன்று வகைகளாகப் பிரிப்பர். பல பிறவிகளில் ஈட்டப்பட்டுக் கிடந்த வினையின் தொகுதி தொல்வினை (சஞ்சிதம்) எனப்படும். இப்பிறவியில் உயிர்களுக்கு இறைவனால் ஊட்டப்படுகிற வினை ஊழ்வினை (பிராரத்தம்) என்று பெயர் பெறும். ஊழ்வினைப் பயனை நுகரும் போதே மேலும் ஈட்டப்படுகிற வினை வருவினை (ஆகாமியம்) என்று பெயர்பெறும்.

இரு வினைகளையும் அநாதி என்று கொள்வது சித்தாந்தக் கருத்து என்பது முன்பே விளக்கப்பட்டது. ஆயினும் உயிர்கள் வினைப் பயனை நுகரும் போதே புதிய வினைகளையும் செய்கின்றன என்பதையும் கண்டோம். இவ்வாறு நுகரும்போது முன் செய்த வினையின் ஒரு பகுதி அனுபவித்துக் கழிக்கப்படுகிறது. ஆணவ மலத்துடன் கூடிய உயிர்கள் வினைப் பயன்களை நுகரும் பொழுது 'யான்' 'எனது' என்ற மயக்கத்தினால் விருப்பும் வெறுப்பும் உடையனவாகின்றன. அதன் பயனாகப் பிறவிச் சுழலில் அகப்பட்டு மேலும் துயரடைகின்றன. இவ்வாறு வருகின்ற முறைமை தொடர்ச்சியாக வருகின்ற ஆற்று வெள்ளம் ஒரு இடத்தைக் கடந்து செல்லும் பொழுது அதன் பின்னர் வருகிற நீர் அதனை நிறைப்பது போன்றது. இக்கருத்து சிவஞானசித்தியாரில்,

**''இருவினை அநாதி ஆதி இயற்றலால் நுகர்வால் அந்தம்**
**வருமலம் சார்ந்து மாயா உருவுகள் மருவி ஆர்த்துத்**
**தருசெயல் முறைமையாலே தான்பலபேதம் காட்டி**
**அருஅதாய் நின்று அரன்தன் ஆணையின் அமர்ந்து செல்லும்**

(சித்தியார் சுபக்கம் 130) என்று ஆசிரியரால் விளக்கப்படுகிறது

இருவினைகளையும் மனம் மொழி மெய் என்ற முக்கரணங்களால் நாம் ஈட்டுகிறோம். பிற உயிர்களுக்கு நாம் இழைக்கும் துன்பம் தீவினையாகிறது நாம் செய்யும் நன்மை நல்வினை எனப்படுகிறது.

இறைவனால் விதிக்கப்பட்ட அறங்களைச் செய்வது நல்வினையில் பாற்படும். மாறாகச் செய்யப்படும் மறங்களும், விதித்த அறங்களைச் செய்யாமையும் தீவினைகளாகின்றன. இவை ஒவ்வொரு பிறவியின் முடிவிலும் நுண்மைநிலை அடைந்து புத்தி தத்துவத்தைப் பற்றிக் கொண்டு மாயையில் கட்டுப்பட்டு நிற்கும். பின்வரும் பிறவியில் இவ் வினைகளின் பயனை இறைவனே ஊட்டுவான்.

சமணம் கொள்ளும் வினைக்கொள்கையின்படி செய்த வினைகளே தாமாக வந்து செய்தவனைப் பற்றும். இது எத்தகையது எனில் ஓர் இளங்கன்று மந்தையாக நிற்கும் பசுக்கூட்டத்தில் தனது தாய்ப் பசுவைத்தானே போய் அடைவதைப் போன்றது என்பர். சைவ சித்தாந்தம் இக்கொள்கையை மறுக்கிறது.

வினை சடம் ஆதலால் அதுவே தன்னைச் செய்தவனைச் சென்று பற்றாது. சிற்றறிவும் சிறு தொழிலும் உடைய உயிரும் தான் செய்த வினைப் பயனைத் தானே நுகராது மேலும் நல்வினைப் பயன் கிட்டும் போது அதனைத் தனது என்று உரிமை கொண்டாடும் உயிர். தீவினைப் பயனை நுகர நேர்ந்தால் அதனைத் தனக்குரியதன்று என்று தள்ளி விடவும் முனையும். இதனாலேயே ''அவ்வினையைப், பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல், ஆர்தான் அறிந்து அணைப்பார் ஆங்கு'' என்று மெய்கண்ட தேவர் சிவஞானபோதத்தின இரண்டாம் நூற்பாவின் இரண்டாம் அதிகரணத்தில் வருகிற வெண்பாவில் கூறியருளுகிறார்.

இரு வினைகளும் இயற்றப்பட்ட அப்பிறவியிலேயே பயன் தருவதில்லை. அவற்றின் வன்மை மென்மைகளுக்கு ஏற்ப இம்மையிலோ மறுமையிலோ அல்லது பின் எப்போதோ ஒரு பிறவியிலோ இறைவனால் உயிர்களுக்கு ஊட்டப்படும். இதை விளக்குவதற்காக ஓர் உவமை கூறப்படும். ஒருவன் ஒரு பனையின் விதையை மண்ணிலே நட்டான் பின்னர் ஒரு தென்னங் கன்றினை வைத்தான். அதன் பிறகு கத்தரிச் செடியை நட்டான். அதன் பின் கீரையை விதைத்தான். இவை பயன் தரும் போது அதே கால வரிசைப்படி பயன் தாரா. கீரை 15 நாளிலும் கத்தரி ஒரு மாதத்திலும் தென்னை 5 ஆண்டுகளிலும் பனை 30 ஆண்டு கழித்தும் பயன் தருவது போலவே வினைப்பயனும் வரும்.

இறைவன் வினைப் பயன்களை உயிர்களுக்கு ஊட்டும் வாயில்கள் மூன்று எனப்படும். அவை ஆதி தைவிகம், ஆதி பௌதிகம், ஆதி ஆன்மிகம் என்று பெயர் பெறும். ஆதி தைவிகம் என்பது தெய்வத்தால் வருவது என்ற பொருளைத் தரும். தாயின் கருப்பையில் இருக்கும்போது உயிருக்கு நேரும் துயரம், பிறக்கும் போதும் இறக்கும் போதும் ஏற்படும் துன்பங்கள் ஆகியன இவற்றுள் அடங்கும்.

ஆதி பௌதிகம் என்பது ஐம்பெரும் பூதங்களின் வாயிலாக வருவன. மழையாலும் பனியாலும் வெப்பத்தாலும் இடி மின்னல் நில நடுக்கம் ஆகியவற்றால் வருவன இவ்வகையில் அடங்கும். ஆதியான்மிகம் என்பது தன்னாலும் பிற உயிர்களாலும் வருவது என்ற பொருளைத் தரும். நோயால் வருந்துதல், மன அமைதியை இழத்தல் பிறரால் வஞ்சிக்கப்படுதல் போன்றன இவ்வகையுள் அடங்கும்.

**அற ஒழுக்கம்**

வினையின் பிணிப்பிலிருந்து விடுபடவே முடியாதா? வினாடி தோறும் வினை செய்கிற மனிதன் நல்வினையும் இயற்றுதல் கூடாது தீவினையும் இயற்றுதல் கூடாது என்றால் அவன் செயலற்றவனாக இருக்க வேண்டுமா? என்றெல்லாம் ஐயங்கள் எழும்.

சைவசித்தாந்தம் இவ்வினாக்களுக்குரிய விடைகளைத் தருகிறது. இறைவன் விதித்த அறநெறியில் ஒழுகுதல் வேண்டும். அறம் அல்லாதவற்றை விட்டு நீங்குதல் வேண்டும். இவ்வாறு அறவாழ்வை மேற்கொள்ளும் போதும் நான் செய்தேன் பிறர் செய்தார் என்னும் செருக்குடன் நடந்து கொள்ளாமல் எல்லாம் சிவன் செயல் என்ற எண்ணத்துடனேயே செயலாற்றுதல் வேண்டும்.

கடைப்பிடிக்கத்தக்க ஒழுக்க நெறிகளை அருள் நந்தி சிவம்,

**"ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம்**
**வழக்குஇலாத் தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை**
**அழுக்குஇலாத் துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித்தல் ஆதி**
**இழுக்குஇலா அறங்கள் ஆனால் இரங்குவான் பணி அறங்கள்"**

(சித்தியார் சுபக்கம் 113) என்று அருளிச் செய்துள்ளார்.

எல்லாம் சிவன் செயல் என்று நிற்கின்ற நிலையை "சிவனவனது என் செயலது ஆகின்றது" என்று திருக்களிற்றுப் படியார் (பாடல் 64) உணர்த்துகிறது.

உயிர்களுக்கு வினை நீங்கும் முறைமையை மல பரிபாகம் இரு வினையொப்பு சத்திநிபாதம் என்று வரிசைப்படுத்திக் கூறுவர். அது பற்றிய விளக்கம் இதனையடுத்து வருகிற சாதனம் பற்றிய இயலில் இடம் பெற்றுள்ளது.

கொடிய தீவினை செய்தால் மிக உயர்ந்த நன்மைகள் செய்வதன் மூலம் அத்தீவினைகளைக் கழிக்க முடியும் என்ற கருத்து சைவ சித்தாந்தத்தில் ஏற்றுக்கொள்ளப் படுவதில்லை என்பது இங்கு நினையத்தக்கது. இயற்றிய நல்வினையின் பயனும் தீவினையின் பயனும் உயிர்களால் நுகர்ந்தே கழிக்கப்படும் என்பதே சித்தாந்தமாகும்.

# இயல் ஐந்து

## சாதனம்—பயன்

சைவசித்தாந்தம் கூறுகின்ற முப்பொருள்களுள்ளே இறைவன் பாசங்களை அறிவதில்லை. பாசங்களாகிய தளைகள் இறைவனை அறிய மாட்டா. இவ்விரண்டுக்கும் இடைநின்றதாகிய உயிரே மற்றையிரண்டையும் அறிந்து அனுபவிப்பதாகும். இக்கருத்து முன்பே விளக்கப் பட்டது.

இதிலிருந்து சாதகம் செய்வதற்கு அதாவது முயற்சிகளை மேற்கொள்ளுவதற்கு உரிய தகுதி உயிர்களுக்கே உண்டு என்பது புலப்படும். எத்தகைய சாதகங்களை மேற்கொண்டால் உயிர் கட்டுக்களினின்றும் நீங்கி வீடு பேறு அடையும் என்பது பற்றிப் பல்வேறு சமயங்கள் பல்வேறு கருத்துக்களை முன் வைக்கின்றன.

வேள்விகளை இயற்றுவதன் மூலம் வீடு பேறு அடையலாம் என்பதும், மந்திரங்களை ஓதுவதன் மூலம் அவற்றின் அதிதெய்வங்களைக் கட்டுபடுத்தி முத்தி பெறலாம் என்பதும் பூர்வ மீமாஞ்சகர் கொள்கை. நோன்புகளை மேற்கொண்டும் தலைமயிரைப் பறித்தும் சுடு பாறையில் கிடந்தும் தன்னை ஒறுத்துக் கொள்வதன் மூலம் விடுதலை பெறலாம் என்பது சமணத்தின் கொள்கை. நாள்தோறும் செய்யும் நித்திய கருமங்களினாலும், சிறப்பு நாள்களில் செய்யும் நைமித்திக கருமங்களினாலும் | உய்யலாம் என்பது ஒரு சாரார் கருத்து. எட்டு உறுப்புக்கள் கொண்ட யோக நெறியில் தலைப்பட்டு மனத்தை ஒரு நிலைப்படுத்தி மூச்சைக் கட்டி, வீடு பேறு அடையலாம் என்பது யோக மதத்தினர் கொள்கை.

### நால்வகை நெறிகள்

சைவ சித்தாந்தம் இக்கொள்கைகளை மறுத்து உண்மையான தவம் என்பது சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை நெறிகளில் ஒழுகுவதேயாகும் என்று கொள்ளுகிறது. இந்நால்வகை நெறிகளும் மாணிக்கவாசகரால் "சீலம் நோன்பு செறிவு அறிவு" (திருவாசகம் ஆனந்தமாலை 3) என்று சுட்டப்படுகின்றன. இவற்றை தொண்டு நெறி, மகன்மை நெறி, தோழமை நெறி, அறிவு நெறி என்பர். அவை முறையே தாத மார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் என வழங்கும்.

சரியை எனப்படும் தொண்டு நெறி உடலால் இறைவனை வழிபடுவதைக் குறிக்கும். இதுவே எல்லாராலும் எளிதில் மேற்கொள்ளத்தக்க முதல் நெறியாகும். திருக்கோயிலைத் தூய்மைப்

படுத்துதல், திருமெழுக்கிடுதல், திருநந்தவனம் அமைத்தல், மலர் பறித்தல். மாலைகள் தொடுத்தல் முதலிய தொண்டுகள் இதனுள் அடங்குவன. இந்நெறியில் நின்றவர்க்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாகத் திருநாவுக்கரசு நாயனாரைக் குறிப்பிடுவார்கள். அவர் உழவாரப் படை ஏந்திக் கைத் திருத்தொண்டு செய்தமை நினைவு கூரத்தக்கது.

கிரியை எனப்படும் மகன்மை நெறி இறைவனின் திருமேனியைத் திருமுழுக்காட்டி திருமுறைகளை ஓதியும் திருவைந்தெழுத்தைக் கணித்தும் வழிபாடு செய்வதாகும். இது உடம்பாலும் மனத்தாலும் நிகழ்த்தப் பெறும் வழிபாடாகும். இந்த நெறியிலே நின்று முத்தி பெற்றவர் திருஞானசம்பந்த நாயனார் ஆவார். அவர் பல திருத்தலங்களுக்கும் சென்று சிவபெருமானை நாளும் இன்னிசையால் தமிழ்ப் பாமாலை சூட்டி வழிபட்டவர் என்பது நினைவு கூரத்தக்கது.

யோகம் எனப்படும் தோழமை நெறி அகத்தால் இயற்றப் படுவது. மனத்தை இறைவனிடத்திலே செலுத்தி ஒரு நிலைப்படுத்தித் திருவருளிலே தோய்ந்து நிற்பது யோக வழிபாடு ஆகும். யோக நிலையிலே நின்று எட்டு வகைச் சித்திகள் பெறுவது இதன் நோக்கம் ஆகாது. எனவே சைவ சித்தாந்தம் சிவ யோகத்தையே வலியுறுத்தும். இந்த நெறியில் நின்று முத்தி பெற்றவர் சுந்தரமூர்த்தி நாயனார். ''பன்னரும் பயில் யோக பரம்பரையை விரும்பினார்'' என்று சேக்கிழார் பெருமான் சுந்தரமூர்த்தி நாயனாரைப் பற்றிக் கூறுவதை இங்கே நினையவேண்டும்.

ஞானம் எனப்படும் நன்னெறி நான்காவது படி நிலையாகக் கொள்ளப்பெறும். முதல் மூன்று நிலையிலும் பயின்ற பிறகே ஞானம் தலைக்கூடும் என்பர். இந்நிலையை அடைந்தவர்க்கு இறைவனே குருவுமாக எழுந்தருளி வந்து ஞானத்தை வழங்குவான். சிவஞான போதத்தில் எட்டாம் நூற்பாவின் முதல் அதிகரணத்தில், ''மேற் சரியா கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்'' என்பது மெய்கண்டதேவர் அருளிச் செய்த ஏது. மாணிக்கவாசகப் பெருமானுக்கு இறைவன் குருந்த மரத்தின் நிழலில் குருவடிவாக எழுந்தருளி அருள் பாலித்தமை இங்கே நினையத்தக்கது.

இந்த நான்கு படி நிலைகள் ஒவ்வொன்றையும் நான்காக வகுத்துக் காட்டுவர். அதாவது சரியை நெறி ஒன்றே சரியையிற் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என நான்காகும். இவ்வாறு மற்ற மூன்றனுக்கும் நான்கு நான்கு படி நிலைகளாக மொத்தம் பதினாறு என்று வகைப்படுத்துவர்.

சரியை முதலியவற்றையும் இரண்டாகப் பகுத்து உபாயச் சரியை உபாயக் கிரியை முதலிய நான்காகவும் உண்மைச் சரியை உண்மைக் கிரியை முதலிய நான்காகவும் வகைப்படுத்திக் கூறப்படும். இவற்றுள் உபாயம் என்பன உலகியல் நன்மைகளைக் குறிக்கோளாகக் கொண்டு செய்யப்படுவன என்பர். உண்மைச் சரியை முதலியன கைம்மாறு கருதாமல் இயற்றப்படும் சிவ புண்ணியங்கள் என்பர்.

ஞானம் என்பது கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்று நான்கு வகைப்படும் என்பர்,

பக்குவப்பட்ட உயிர்களுக்கு இறைவன் குருவாகி வந்து ஞானத்தை உணர்த்தும் போது மூன்று வகையாக நின்று உணர்த்துவான் என்பர் பெரியோர். ஒரு மலமுடைய விஞ்ஞான கலர்க்கு இறைவன் உள் நின்று ஞானத்தை உணர்த்துவான். இது தன்மையில் நின்று உணர்த்துதல் எனப்படும்.

இரண்டு மலங்களையுடைய பிரளயாகலர்க்கு ஞானத்தை உணர்த்தும் போது இறைவன் முக்கண்ணும் நாற்றோளும் சடை முடியும் திருநீலகண்டமும் கொண்ட திருமேனியோடு எழுந்தருளி வந்து அருள் புரிவான். இது முன்னிலையில் நின்று உணர்த்துவது எனப்பெறும்.

மும்மலமுடைய சகலர்க்கு ஞானத்தை உணர்த்தும் போது மானுட வடிவம் தரித்து ஒரு குருவின் வழியாக, அவரை இடம் கொண்டு அருள் பாலிப்பான். இது படர்க்கையில் நின்று உணர்த்து வதாகும். இவ்வாறு மூன்று வகையாக ஞானத்தை உணர்த்துவது மாணவனின் அறிவுக் கூர்மையை மனத்துட்கொண்டு. அவன் கொள்ளும், முறைமையில் ஆசிரியர் பாடம் பயிற்றுவிப்பதைப் போன்றது.

தீக்கை என்பது சைவ சித்தாந்தத்தில் மிக முக்கியமான இடத்தைப் பெறுகிறது. தீட்சை என்ற வட சொல்லின் தமிழ் வடிவமே தீக்கை என்பது. இதன் பொருள் பாசத்தைக் கெடுத்து, ஞானத்தைக் கொடுத்தல் என்பதாகும். இவற்றுள் பல வகைகள் கூறப்படும். இவற்றைப் பற்றிய விரிவான செய்திகள் சிவஞான மாபாடியத்தில் சிறப்புப் பாயிரத்துக்கு மாதவச் சிவஞான முனிவர் வரைந்த பேருரையில் கூறப்பட்டுள்ளன.

சுருக்கமாக நான்கு வகையான தீக்கைகளைப் பற்றி அறிந்து கொள்ளுவது நலம் பயக்கும். அவையாவன சமய தீக்கை, விசேட தீக்கை, நிருவாண தீக்கை, ஆசாரிய அபிடேகம் என்பனவாகும்.

இவற்றுள் சமய தீக்கை என்பது சைவ சமய நெறி முறைகளைக் கடைப்பிடிப்பதற்குரிய தகுதியை ஒருவருக்கு அளிப்பதாகும் பரம்பரையாக சைவக் குடும்பத்திலே வந்த பெற்றோருக்கு மகவாசப் பிறந்தாலும் அக்குழந்தை சைவ சமய ஒழுக்கங்களைக் கடைப்பிடிக் கும் அதிகாரம் சமய தீக்கை ஏற்ற பிறகே பெறும் என்பர்.

அடுத்ததாகிய விசேட தீக்கை என்பது கிரியை நெறியிலும் யோக நெறியிலும் வழிபாடாற்றுகின்ற உரிமையைத் தருவதாகும். விசேட தீக்கை பெற்றவர்களே ஆன்மார்த்தலிங்க பூசையோ அல்லது மகேசுவரமூர்த்த பூசையோ செய்வதற்கு உரியவர் ஆவர். விசேட தீக்கை ஏற்றவர்கள் இயற்றுகின்ற வழிபாடுகளைச் சிவபிரான் மனமுவந்து ஏற்றுக்கொண்டு விரைவில் அருள் பாலிப்பார் என்பர்.

மூன்றாவது வகை நிருவாண தீக்கையாகும். இது பாசப் பிணிப்பை முற்றிலும் அகற்றி உயிரைத் தூய்மையாக்கி இறைவன் திருவடியை அடையும் தகுதியாக்கும் பொருட்டு ஆசிரியரால் செய்யப் படுவதாகும். ஆறு அத்துவாக்களிலும் தொல்வினையாகச் சேர்ந் திருக்கும் சஞ்சித வினையை நீக்கி ஏறுவினையாகிய ஆகாமியத்தைத் துடைத்து மாணவனை மலப்பிணிப்பிலிருந்து இத்தீக்கைப் பேறு விடு விக்கும் என்பர்.

நான்காவதாகிய ஆசாரிய அபிடேகம் என்பது முதல் மூவகைத் தீக்கையை முறையே பெற்று ஞான முதிர்ச்சியுடைய தக்கவர்க்கு ஆசிரியத் தகுதியைத் தருவதாகும்.

இங்கே கூறப்பட்ட சாதனங்களைக் கடைப்பிடித்து ஒழுகிய உயிருக்கு ஞானநெறியில் செல்லும் பக்குவம் இருவினையொப்பு, மல பரிபாகம், சத்திநிபாதம் என்பனவற்றால் வாய்க்கும் என்பர் பெரியோர்.

இருவினையொப்பு என்பது 'நல்வினையும் தீவினையும் மிகுதலும் குறைதலுமின்றி தம்முள் ஒத்திருத்தல்' என்று பொருள் தராது என் பதை மாதவச்சிவஞான முனிவர் சிவஞான மாபாடியத்தில் விளக்கு கிறார். நல்வினையின் பயனாக விளைகின்ற இன்பத்திலும் தீவினையின் பயனாக விளைகின்ற துன்பத்திலும் விருப்பமும் வெறுப்பும் இன்றி ஒப்ப உவர்ப்புத் தோன்றுதலே இருவினையொப்பு என்பதற்குப் பொரு ளாகும் என்பதைச் சிவஞான முனிவர் தெளிவுற விளக்குகிறார் சுருக்க மாகச் சொல்வதானால் இன்பத்தை விரும்பி நல்வினையை இயற்றா மலும் துன்பத்திற்கு அஞ்சித் தீவினையைக் கைவிடுதலும் இன்றிப் பயன் நோக்காது மேற்கொள்ளும் அறவாழ்க்கையே இருவினையொப்பு எனப்பெறும்.

சத்திநிபாதம் என்பது, இதுவரை உயிரின் அறிவு இச்சை செயல்களைத் திரோதான சத்தியாய் நின்று மறைத்து வந்த இறைவனது ஆற்றல் அருளாற்றலாக உயிரின் மீது பதிதல் என்பர் சத்திநிபாதம் என்ற சொல் சத்தி + நிபாதம் என்ற இரு சொற்களால் ஆன கூட்டு என்பர் இவற்றுள் சத்தி என்பது இறைவனின் திருவருள் என்றும் நிபாதம் என்பது வீழ்ச்சி என்றும் பொருள்படும்.

ஒரு கூட்டத்தின் நடுவே ஒரு கல் வந்து விழுந்தவுடனே கூடி இருந்த கூட்டமனைத்தும் நாலாபக்கமும் சிதறி ஓடி விடுமன்றோ? மாதவச் சிவஞான முனிவர் இந்த உவமையையே சத்திநிபாதத் திற்குத் தமது சிவஞான மாபாடியத்தில் எடுத்துக் காட்டுகிறார். அருட்சத்தி பதிந்தவுடனே பக்குவமுடைய உயிர்களுக்கு உலகப் பற்றுக்கள் மீது அச்சம் பிறந்து விடும். அந்த அச்சத்தின் காரணமாக உலகப் பிடிப்புக்களிலிருந்து விரைவில் விடுபட்டு நீங்க வேண்டும் என்ற அவா மேம்படும். இதனாலேயே சத்தி பதிதல் என்று கூறாமல் சத்தியின் வீழ்ச்சி என்று பொருள் தரும் சத்திநிபாதம் என்ற சொல்லை முன்னோர் பயன்படுத்தினர் என்பர் முனிவர்.

மலபரிபாகம் எனப்படுவது மலம் தன் ஆற்றல் தேய்வதற்குரிய துணைக்காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதல் என்று சிவஞான முனிவர் உரை வரைகிறார். தோற்றமில் காலந்தொட்டு உயிரின் அறிவை முற்றிலும் மறைத்து நின்றது ஆணவ மலம். அதனுடைய ஆற்றல் குன்றி ஆன்ம அறிவை மயக்க இயலாது வலிகுன்றிப் போதலே மலபரிபாகம். இருவினையொப்பு நிகழ்ந்தபோது மலபரி பாகமும் நிகழும் என்பர் பெரியோர்

சாதனைகளைக் கடைப் பிடிக்கின்ற சாதகர்களாகிய உயிர் களுக்கு அவற்றால் வருகின்ற பயன்களைக் கூறுவது சிவஞான போதத்தில் பயனியல் என்ற தனி இயலாக மெய்கண்ட தேவ நாயனாரால் வகுத்துக் காட்டப்பட்டுள்ளது. பயனை வீடு பேறு என்ற சொல்லால் குறிப்பது சைவ சித்தாந்த மரபு. மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் பொழுது வீடு பேறு என்பது விடுதலை பெறுதல் என்ற பொருளைத் தருவது போலவே தோன்றும். சைவ சித்தாந்தம் இந்தச் சொல்லுக்கு நுட்பமாகப் பொருள் கூறும். வீடு என்பது பாசக் கட்டிலிருந்து விடுபடுதலையும், பேறு என்பது சிவப்பேற்றை அடை தலையும் குறிப்பன என்பர். எனவே அவ்வொரு சொல்லே பாச வீட்டையும் சிவப்பேற்றையும் விளக்கிற்று.

சிவஞான போதத்தின் பத்தாம் நூற்பாவுக்குப் பேருரை வகுக்கத் தொடங்கிய சிவஞான முனிவர் ',பாச வீடும் சிவப்பேறும் எனப் பயன் இருவகைப்படும் ஆகலான், அவ்விரண்டனுள் பாச வீடாகிய பயனைப் பெறுமாறு உணர்த்தும் முகத்தானே சீ பஞ்சாக்

கரத்தை விதிப்படி உச்சரிக்கும் வழி செய்யற்பாலது இது என உணர்த்துவதே'' இந்நூற்பாவின் கருத்தென்று தோற்றுவாய் செய்கின்றார்.

பக்குவமடைந்த உயிர்கள் உய்வதன் பொருட்டு இறைவனே குருவடிவாய் எழுந்தருளி வருவான் என்பது முன்பே கூறப்பட்டது. குரு முதல்வர் தன்மை, முன்னிலை, படர்க்கை என்று மூன்று இடத்திலும் நின்று உணர்த்துவார் என்பதும் உரைக்கப்பட்டது. மிக உயர்ந்த தீவிரதர பக்குவ நிலையைப் பெற்றவர்கள் அந்நிலையிலேயே பாசங்களிலிருந்து விடுபடுவர். ஊஞ்சல் கயிறு அற்ற போது ஆதார மாக விளங்குவது நிலமே. அது போல மலப்பிணிப்பிலிருந்து விடுபட்ட உயிர்கள் சிவபிரான் திருவடிகளைச் சேரும் என்பர்.

ஆயினும் அத்தகைய நிலை அடைந்தவர்களுக்கும் பழக்க வாசனையால் மலம் மீண்டும் வந்து பற்றக்கூடும் இவ்வாறு பற்று கின்ற நினைவு வாசனாமலம் எனப்படும். இம்மல வாசனையும் வந்து தாக்காதவண்ணம் தம்மைக் காத்துக் கொள்வதற்காக ஆசிரியர் திருவைந்தெழுத்தை உபதேசிப்பார். அதனைக் கணிப்பதன் மூலம் மலத்தின் வாசனை கூட வந்து தாக்காது என்பதும் ஆசிரியர் மெய்கண்ட தேவநாயனாரால் ஒன்பதாம் நூற்பாவிலேயே எடுத்துரைக்கப்பட்டது.

திருவைந்தெழுத்து முத்திக்குரிய சாதனங்களில் மிக முக்கிய மானது. சிவயநம என்ற ஐந்தெழுத்து மந்திரம் ஐந்து பொருள்களைக் குறிப்பது சிகரம் சிவத்தையும். வகரம் திருவருளையும், யகரம் உயிரை யும், நகரம் மறைப்பாற்றலையும் மகரம் மலத்தையும் குறிப்பன வாகும்.. சிவாய என்பது முத்தி பஞ்சாக்கரம் என்று வழங்கப் பெறும் வீடு பேற்றில் விருப்பமுடையவர்கள் முத்தி பஞ்சாக் கரத்தையே இடைவிடாது நினைத்தல்வேண்டும் என்பது அருளா ளர்கள் வகுத்துள்ள முறை.

திருவைந்தெழுத்தை ஓதுவதிலும் நான்குமுறைகள் கூறப்படும். அவை சுத்தமானதம், மானதம், மந்தம், உரை என்பனவாகும். மானதம் என்பது நம் செவிக்கும் பிறர் செவிக்கும் கேளாத வண்ணம் மனத்துக்குள்ளேயே ஓதுவதாகும். மந்தம் என்பது தன் காதுக்கு மட்டும் கேட்பதாகவும், பிறர் காதில் படாத வண்ணமும் கணிப்ப தாகும். உரை என்பது தனக்கும் பிறருக்கும் கேட்கும் படியாக ஓதுவ தாகும். இவை அனைத்திலும் உயர்ந்ததான சுத்த மானதம் என்பது அகத்திலே இறைவனுடைய சிந்தனை மாறாத வண்ணம் தியான நெறியில் நின்று கணிப்பதாகும். இத்தகைய தியானமே சிவோகம் பாவனை என்று கூறப்படும்.

சிவய என்னும் முத்தி பஞ்சாக்கரம் வேதத்தில் கூறப்படும் தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தைக் குறிப்பதாகப் பெரியோர் கூறுவர். சி என்பது தத் என்னும் பரம்பொருளையும், ய என்பது துவம் என்னும் உயிரையும் வ என்பது அசி என்னும் அருட் செயலையும் குறிப்பன என்பர்.

இங்ஙனம் நிட்டை கூடிய நிலையை எய்தி முத்தி பஞ்சாக் கரத்தை சுத்த மானதமாகக் கணித்த உயிர் மலப்பிணிப்பிலிருந்து முற்றிலும் நீங்கி விடுகிறது என்பது,

**''அவனே தானே ஆகிய அந்நெறி**
**ஏகனாகி இறை பணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை இன்றே''**

என்னும் சிவஞான போதத்தின் பத்தாம் நூற்பாவில் மெய்கண்ட தேவரால் விளக்கப் படுகிறது.

தன் முனைப்பை முற்றிலும் நீக்கி இறைவனுடைய முழு நிறைவிலே அடங்கி நிற்கின்ற உயிர் இறைவன் அருளால் அல்லது வேறு எதனையும் செய்யாது. ஏகனாகி நிற்றல் என்றதனால் மலம் நீங்கும் இறை பணி நிற்றல் என்றதனால் கன்ம மலமும் மாயா மலமும் பற்றறக் கழியும்.

இவ்வாறு தூய்மையடைந்த உயிர் உலகப் பற்றுக்களிலிருந்து நீங்கித் தனது அறிவு விழைவு ஆற்றல்கள் யாவும் சிவத்தோடு பொருந்தி நிற்கும். இப்பெருநிலையே முத்திநிலை என்று சைவ சித்தாந்தத்தில் கூறப்படுகிறது.

சீவன் முத்தி நிலை, பதமுத்தி நிலை, அபரமுத்தி நிலை, பரமுத்தி நிலை என்ற நான்கு நிலைகளும் சைவ சித்தாந்தத்தில் ஏற்றுக்கொள்ளப் படுகின்றன.

பதமுத்தி என்பது சாலோகம், சாமீபம், சாரூபம் ஆகிய மூன்று நிலைகளையும் பெற்று உயிர்கள் பெருவாழ்வை அடைதல். இது பரமுத்தி என்னும் சாயுச்சிய நிலைக்கு இட்டுச் செல்வது. எனவே இந் நிலையில் உயிர்கள் எய்துவதற்குரிய மேல்நிலை ஒன்று உளது என்றே கொள்ளப் பெறும். அபரமுத்தி என்பதும் பரமுத்திக்குச் செல்லும் படி நிலையே ஆகும்.

பரமுத்தி என்பது சாயுச்சியம் என்றும் கூறப்படும். இந்நிலையில் உயிர் சிவபெருமானுடன் இரண்டறக் கலந்து நிற்கும் என்பர். இவ்வாறு கலந்து நிற்கும் போதும் உயிர் தன் தனித் தன்மையை இழந்து கரைந்து மறையும் என்று சைவ சித்தாந்தம் கொள்ளு

வதில்லை. இறைவனோடு ஒற்றுமைப்பட்டு, சிவமாம் தன்மை எய்திப் பேரானந்தப் பெருவாழ்வை எய்தும். சிவஞான சித்தியாரில் ''சிவனடியைச் சேரும் முத்தி செப்புவது இங்கு யாமே'' (சுபக்கம் 264) என்று இம் முத்தி நிலை விளக்கப்பட்டுள்ளது.

சீவன் முத்தி என்பது இவ்வுலகில் உடம்போடு வாழ்கின்ற போதே மும்மலக் கட்டிலிருந்து விடுபட்டு ஞானம் என்னும் பெருங் கடலில் மூழ்கி மாறாத பேரின்பமாகிய பெரும் பயனை நுகர்ந்து சிவபெருமானின் திருவடியின் கீழ் இருத்தல் ஆகும். இக்கருத்து சிவஞான சித்தியாரில் ''சித்தாந்தத்தே சிவன் தன் திருக்கடைக்கண் சேர்த்திச் செனனம் ஒன்றிலே சீவன் முத்தர் ஆக, வைத்து ஆண்டு மலம் கழுவி ஞானவாரி மடுத்து ஆனந்தம் பொழிந்து வரும் பிறப்பை அறுத்து முத்தாந்தப் பாத மலர்க் கீழ் வைப்பன் (சுபக்கம் 268) என்று விளக்கப்பெறுகிறது.

இத்தகைய உயர்ந்த வீடு பேற்றினை எய்திய உயிர்கள் சிவபெருமான் தமக்குக் கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் அருள் பாலித்த பெருங்கருணைத் திறத்தினை ஒருபோதும் மறவாறு சிவபெருமானுக்கு அடிமைத் திறம் பூண்டு ஒழுகும் சிவபெருமானுடைய அடியவர் கூட்டத்தை விட்டு நீங்காமலும் அவ்வடியவர்கள் திருவேடத்திலும், திருக்கோயிலில் வீற்றிருக்கும் திருமேனிகளிலும் சிவனையே கண்டு வழிபட்டுப் பேரின்பத்தில் திளைத்திருக்கும்



## கையிருப்பு நூல்கள்

| | | விலை |
|---|---|---|
| 1) | சிவஞான மாபாடியம் | 260 00 |
| 2) | சிவஞான போதம்<br>வழித்துணை விளக்கம் | 60 00 |
| 3) | சிவஞான போத<br>வசனாலங்கார தீபம் | 40 00 |
| 4) | சிவஞான சித்தியார்<br>(பரபக்கமும் சுபக்கமும்) | 60 00 |
| 5) | மெய்கண்ட நூல்களுள் ஏழு<br>(இருபா இருபஃது, வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்) | 40 00 |
| 6) | சைவ சித்தாந்தத் தேனமுது | 13 00 |
| 7) | உண்மை விளக்கம் | 30 00 |

S. சிதம்பரநாதகல்யாணி
78, செல்விநகர்
சிந்துபூந்துறை
திருநெல்வேலி-627 001.

ரெக்ஸி, நெல்லை-1.